# திருப்பராய்த்துறை, ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்

# அந்தர்யோகம்



1983ஆம் ஞு நவராத்திரி பூஜையின் கடைசி மூன்று தினங்களாகிய அக்டோபர் மாதம் 13, 14, 15 தேதிகளில் கீழ்க்கண்ட வாழ்க்கை முறைப்படி இங்கு அந்தர்யோகம் நடைபெறும். இதில் கலந்துகொள்ள விரும்பும் அன்பர்கள் அக்டோபர் மாதம் 12ஆம் தேதி புதன் கிழமை இரவே நேரில் நாள் ஒன்றுக்கு ரூ. 7-00 வீதம் ரூ. 21-00 உணவுக்காகச் செலுத்திப் பெயர்களைப் பதிவு செய்துகொள்ளவேண்டும். தாய்மார்களுக்கும் இதில் இடமுண்டு. பன்னிரண்டு வயதுக்குக் கீழ்ப்பட்ட சிறுவர்களும், கைக்குழந்தைகளுடன் வரும் தாய்மார்களும், நடைமுறையைப் பின்பற்ற இயலாதவர்களும் இதில் சேர்த்துக் கொள்ளப்பட மாட்டார்கள்.

### வாழ்க்கை முறை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| காலை | 6 | மணிமுதல் | 7 | மணிவரை | தியானம் |
| ,, | 8 | ,, | 9 | ,, | பஜனை |
| ,, | 9 | ,, | 10 | ,, | லலிதா நாம விளக்க உபந்யாசம் |
| ,, | 11 | ,, | 12 | ,, | அர்ச்சனை |
| மாலை | 2 | ,, | 3 | ,, | லலிதா நாம விளக்க உபந்யாசம் |
| ,, | 5 | ,, | 6 | ,, | அர்ச்சனை |
| ,, | 6 | ,, | 7 | ,, | தியானம் |
| இரவு | 8 | ,, | 9 | ,, | பஜனை |

தியானம், லலிதாநாம விளக்க உபந்யாசம், அர்ச்சனை, பஜனை இந்த நிகழ்ச்சிகள் நடைபெறும் நேரங்கள் போக பாக்கியிருக்கும் 16 மணி நேரத்தில் இடைவிடாது நாமஜபம் நடந்துகொண்டிருக்கும். அந்தர்யோகத்தில் கலந்துகொள்ளும் அன்பர்கள் ஒவ்வொருவரும் காலையில் ஒருமணி நேரமும் மாலையில் ஒரு மணி நேரமும் அகண்டநாம பஜனையில் கலந்துகொள்ளக் கடமைப்பட்டிருக்கிறார்கள். இரவு 10 மணி முதல் காலை 4 மணி வரையில் மாணவர்கள் செய்யும் நாம பஜனையில் அன்பர்கள் தங்களுக்கு வசதிப்பட்டால் கலந்துகொள்ளலாம். தாய்மார்கள் இரவு 10 மணிமுதல் காலை 6 மணி வரை நடைபெறும் நாம ஜபத்தில் கலந்துகொள்ள மாட்டார்கள்.

# தர்ம சக்கரம்

மாத சஞ்சிகை

| சக்கரம் 32 | ருத்ரோத்காரி ஸு புரட்டாசி மீ | ஆரம் 9 |
| --- | --- | --- |

பொருளடக்கம் பக்கம்



## சந்தா விவரம்

டிபாஸிட் சந்தா: ரூ. 150 அனுப்பி இங்கு டிபாஸிட் செய்துவிட்டால் டிபாஸிட் இங்கு இருக்கும்வரையில் மாதந்தோறும் தர்ம சக்கரம் பத்திரிகை தங்களுக்கு வந்து கொண்டிருக்கும். ஆண்டுதோறும் சந்தா செலுத்திப் புதுப்பிக்கவேண்டியதில்லை. பத்திரிகை வேண்டாம் என்று கருதும்பொழுது டிபாஸிட்செய்த ரூபாய் நூற்றைம்பதையும் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். இந்தத் திட்டம் உள்நாட்டுக்கு மட்டும் உரியது.

ஆண்டு சந்தா: ரூ. 15 செலுத்தியது முதல் அல்லது அடுத்த மாதம் முதல் பன்னிரண்டு மாதங்களுக்கு ஒவ்வொரு தமிழ் மாதமும் முதல் தேதியில் கிடைக்கும்படி பத்திரிகை அனுப்பப்படுகிறது.

சகாய சந்தா: மாத வருவாய் ரூ. 200 அல்லது ஆண்டு வருவாய் ரூ. 2400க்கும் குறைவாக உள்ளவர்கள் ஆண்டு சந்தா பதினைந்து செலுத்த இயலாது இருந்தால் ரூபாய் பத்து அனுப்பலாம். பாக்கி ரூபாய் ஐந்தைப் பாண்டிச்சேரி S. விஸ்வநாதன் 'தர்ம சக்கர உதவிநிதி' யினின்று ஈடுசெய்து கொள்கிறோம். தெய்விக விஷயமாதலால் ரூ. 15 செலுத்த இயலுகிறவர்கள் இந்தச் சலுகையைப் பயன்படுத்தவேண்டாம்.

தமிழ் நாட்டிலும் பாண்டிச்சேரியிலும் உள்ள அரசாங்கப் பொது நூலகங்கள் அனைத்துக்கும் தர்ம சக்கரம் அன்பர்களின் உதவியால் தொடர்ந்து அனுப்பப்பெறுகிறது. நூலக நிர்வாகியிடம் கேட்டுப்பெற்றுப் படித்துப் பயனடையக் கோருகிறோம்.

உள்நாடு தனி இதழ் ரூ. 1-50 வெளிநாடு தனி இதழ் ரூ. 3-00

**உள்நாடு வருட சந்தா: ரூ. 15-00 வெளிநாடு வருட சந்தா: ரூ. 35-00**

# அந்தர்யோக விவரங்கள்

**பாண்டிச்சேரியில் 25—9—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* சொசியெத்தே ப்ரோக்ரேஸிஸ்த் உயர்நிலைப்பள்ளி
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**மதுரை ஜில்லா—திருமங்கலத்தில் 25—9—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* ஸ்ரீ ராமகிருஷ்ண-விவேகானந்த தபோவனம்
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-15 மணிவரை
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி போதானந்தர்

**மதுரையில் 25—9—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* கீழமாசி வீதி அ. பா. இ. நா. உறவின் முறை மீட்டிங் ஹால்
*நேரம்:* காலை 9-30 மணிமுதல் மாலை 5-00 மணிவரை
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி ஸதானந்தர்

**மதுரை ஜில்லா—திருவேடகத்தில் 2—10—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* விவேகானந்த கல்லூரி
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
*உணவு வசதி:* நேரில் பகல் உணவிற்கு ரூ. 1-50ம் மாலை சிற்றுண்டிக்கு 75 பைசாவும் செலுத்திச் சீட்டுப்பெற்றுக்கொள்ளலாம்.

**மதுரை ஜில்லா—சுருளிமலையில் 2—10—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* சுருளித் தீர்த்தத்துக்கு அருகில்
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**பெங்களூர் கண்டோன்மென்டில் 9—10—83 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* அஜந்தா டாக்கீஸ் எதிரிலுள்ள ஒடுக்கத்தூர் சுவாமிகள் மடம்
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**ஆந்திர மாகாணம்—சித்தூர் ஜில்லா—கொப்பம் டவுனில் 10—10—83 [திங்கட்கிழமை**

*இடம்:* ஸ்ரீ சதானந்தர் ஆச்ரமம்
*நேரம்:* காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
*நடத்துபவர்:* ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

---

அந்தர்யோக நடைமுறையில் நாமஜபம், தியானம், உபந்யாசம், மௌனம், ஸத்ஸம்பாஷணை முதலியவை அடங்கும். உபந்யாசங்கள் யோகம், பக்தி, ஞானம் முதலியவைகளைப்பற்றி நடைபெறும். ஸத்ஸம்பாஷணையில் அன்பர்கள் தங்கள் சந்தேகங்களை நீக்கிக்கொள்ளலாம். விருப்பமுள்ள அன்பர்களும், தாய்மார்களும் அந்தர்யோகங்களில் கலந்துகொள்ளலாம். ஆனால் கைக்குழந்தைகளுடன்வரும் தாய்மார்களும், பன்னிரண்டு வயதிற்குக் கீழ்ப்பட்ட சிறுவர்களும் கலந்துகொள்ள அனுமதிக்கப்படமாட்டார்கள்.



प्रज्ञानं ब्रह्म

# தர்ம சக்கரம்

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.


| சக்கரம் 32 | ருத்ரோத்காரி ஹூ புரட்டாசி மீ | ஆரம் 9 |
|---|---|---|


## பிரார்த்தனை

क्व चात्मा क्व च वानात्मा क्व शुभं क्वाशुभं तथा ।
क्व चिन्ता क्व च वाचिन्ता स्वमहिम्नि स्थितस्य मे ॥

— अष्टावक्रसंहिता

க்வ சாத்மா க்வ ச வானாத்மா க்வ சுபம் க்வாசுபம் ததா ।
க்வ சிந்தா க்வ ச வாசிந்தா ஸ்வமஹிம்னி ஸ்திதஸ்ய மே ॥

— அஷ்டாவக்ரஸம்ஹிதா

சொருபத்தில் திளைத்திருப்பவனுக்கு ஆத்மா அனாத்மா பேதம் இல்லை; நலமும்கேடும் இல்லை; கவலைப்படுவதும் கவலையின்மையும் இல்லை.

பிறத்தலும்பிறந் தாற்பிணிப்பட வாய்ந்(து) அசைந்து(உ)ட லம்புகுந்துநின்(று)
இறக்குமாறு(உ)ளதே இழித்தேன் பிறப்பினைநான்
அறத்தையேபுரிந் தமனத்தனாய் ஆர்வச்செற்றக்கு ரோதநீக்கியுன்
திறத்தனாய் ஒழிந்தேன் திருவாரூர் அம்மானே.

— தேவாரம்

# அருள் விருந்து

தூய மனதில் யாண்டும் அமைதி குடிகொள்கிறது.

வாழ்க்கையோடு சம்பந்தப்படாத சமயம் பிணத்துக்கு நிகர்.

தத்துவத்தை உள்ளபடி அறிகின்றவனுக்குக் கஷ்டதசை என்பது இல்லை.

நெடுநாள் நிலைத்திருந்ததை முன்னிட்டுக் கேடு ஒன்றுக்கு இடந்தரலாகாது.

பரத்தைச் சார்ந்திருப்பவனுடைய பாங்கு ஆபத்து வேளையில் நன்கு புலனுகிறது.

ஆற்றலும், அன்பும், அறிவும் ஒன்றுகூடி மனிதனை நிறைமனிதனுக்குகின்றன.

பொருள் ஒன்றை உள்ளபடி அறிந்துகொள்ளுதலே ஞானத்தின் முன்னேற்றமாம்.

இந்திரியங்களுக்கு வசப்படுகிறவன் காற்றில் அகப்பட்டுக்கொண்ட படகுக்கு ஒப்பாவான்.

திறம்படச் செயல்புரியக் கற்றுக்கொள்வதே இக்காலத்திய கல்வியின் நோக்கமாக அமையவேண்டும்.

செல்வத்தை முறையாகச் சம்பாதிக்கவும் செலவு செய்யவும் கற்றுக்கொள்பவனே பண்பட்ட மனிதன்.

பொருள் சேர்ந்த கவிதையே பாராட்டுதற்குரியது. பதங்கள் ஏராளமாய் அமைவதில் பயன் ஒன்றுமில்லை.

முயலுகின்றவனுக்கு அறிவு ஓங்குகிறது; தூய்மையும், அமைதியும் படைத்திருப்பவனிடம் ஞானம் வடிவெடுக்கிறது.

பொருளாதாரத்தில் மேன்மையடைவது முன்னேற்றமாகாது. மன பரிபாகமே முன்னேற்றத்தின் அறிகுறியாம்.

மனிதன் சூழ்நிலைக்கு அடிமையாகலாகாது. பிரதிகூலமான சூழ்நிலையை அனுகூலமானதாக மாற்றுபவனே அறிஞன்.

ஒருவனை ஒருவன் தாக்குதல் பண்பாட்டுக்கு அறிகுறியாகாது. பரஸ்பரம் உதவிபண்ணிக்கொள்ளுதலே பண்பாடாகும்.

வளர்கின்ற செடியில் இலைகள் உள்ளிருந்து வெளிவருவனபோன்று நல்லான் ஒருவன் உள்ளத்தினின்று உயர்வுகளே வெளியாகின்றன.



## பரமஹம்சர் புகட்டிய

# பெருநெறி விளக்கம்

உலகத்தவர் பெரிதும் சுயநலமே வடிவெடுத்தவர்கள் என்பதைக் குறித்துப் பரமஹம்ச தேவர் இங்ஙனம் பகர்ந்தார்.

"உலகப்பற்றுடைய மானுடன் ஒருவன் தன் செல்வியின் விவாகத்துக்காகவென்று ஆயிரக்கணக்கான ரூபாய்களைச் செலவழிக்கின்றான். இவனுடைய போக்கு இங்ஙனம் இருக்கையில் அக்கம்பக்கத்திலிருக்கிறவர்கள் உண்ண உணவில்லாமல் பசியால் வாடுகின்றனர். இரண்டொருவேளை அவர்களுக்கு உணவு படைப்பதைப்பற்றி அவன் சங்கடப்படுகிறான். அங்ஙனம் சிறிதளவாவது பிறர் தேவையைப் பூர்த்தி பண்ணுதற்கு முன்பு அப்படிச் செய்யலாமா வேண்டாமா என்று பலதடவை அவன் எண்ணிப் பார்க்கிறான். அவனைச் சூழ்ந்துள்ள அயலார்களுக்கு உண்ண உணவு கிடையாது. அதைப்பற்றி அவனுக்கென்ன? கவலையற்றவனாக அவன் தன் போக்கில் வாழ்ந்திருக்கிறான். அவர்கள் வறுமைவாய்ப்பட்டிருக்கலாம். ஆனால் நான் அவர்களுக்கு என்ன செய்யமுடியும்? அத்தகைய அசடுகள் வாழ்ந்திருக்கட்டும் அல்லது மடிந்துபட்டுப் போகட்டும். என் குடும்பத்தார் வறுமை நோய்க்கு ஆளாகாதிருக்கும்படி பார்த்துக்கொள்வது ஒன்றே எனக்கு ஏற்பட்டுள்ள கடமையாகும். இத்தகைய கஞ்சத்தனம் படைத்தவர்கள் உலகுக்கு நலன் செய்வதைக் குறித்துத் தாராளமாகப் பேசுகின்றனர்."

திரைலோக்கியர்: "ஐயனே, தாங்கள் பகர்கிற பிரகாரம் உலகத்தில் உள்ளவர்கள் எல்லாரும் சுயநலக்காரர்கள் அல்லர். நல்லவர்களும் ஒரு சிலர் சமுதாயத்தில் எப்பொழுதுமே இருந்து வருகிறார்கள். சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். சைதன்ய தேவருடைய பக்தராகிய புண்டரிக வித்யாநிதி என்பவருடைய வாழ்க்கை முறையை ஆராய்ந்து பார்ப்போம். மக்களுக்கு அரிய பாங்கில் பணிவிடை பண்ணிவந்த அப்பெரியவர் குடும்பியாகவே இருந்துகொண்டு அரியபெரிய பணிவிடைகளைச் செய்திருக்கிறார்."

பரமஹம்சதேவர்: "அப்பெருமகன் உலகுக்கு நல்ல முறையில் தொண்டு புரிந்தது உண்மையே. அன்னவரிடம் இருந்த விவேகமும் வைராக்கியமும் இன்னும் சிறிது மேல் நோக்கிச் சென்றிருக்குமாகில் உலகத்திற்குப் பணிவிடை பண்ணும் மயக்கத்துக்கு அவர் ஆளாகியிருக்கமாட்டார்."

இதைக்கேட்ட திரைலோக்கியர் மறுமொழி சொல்ல இயலாதவராக அமைதியுற்று இருந்தார். இப்பொழுது மகேந்திரநாத குப்தர் கிரீஷ்சந்திர கோஷரிடம் தனித்து வைத்துப் பகர்ந்ததாவது: "ஆகவே, பரமஹம்சதேவர் இப்பிரபஞ்சத்தைப் பற்றிக் கொண்டிருந்த கருத்தைக் கேசவ சந்திரசேனரைச் சந்தித்த பிறகு திருத்தி அமைத்துக்கொண்டார் என்று திரைலோக்கியர் தம் நூலில் எழுதியிருப்பது சரியன்று."

கிரீஷர் திரைலோக்கியரிடம் பகர்ந்ததாவது: "ஆகவே, ராமகிருஷ்ண பரமஹம்சர் கேசவசந்திரசேனரிடமிருந்து உலக நன்மைக்காக உழைத்தல் என்னும் கோட்பாட்டை அறிந்துகொண்டார் என்று தாம் எழுதியிருப்பது உண்மையன்று."

திரைலோக்கியர்: "ஏன் அப்படிப் பகர்கின்றீர்? சமுதாய வாழ்க்கையில் ஈடுபட்டிருப்பதற்கிடையில் மானுடன் ஒருவன் ஆத்ம சாதனங்களைப் புரிவது சாத்தியம் என்பதை அவர் ஒத்துக்கொள்கிறார் அல்லவா?"

பரமஹம்சதேவர்: "ஆம், சமுதாய வாழ்க்கையையும் பாரமார்த்திகப் பெருவாழ்வையும் சமரசப்படுத்துவது சாத்தியம். ஆனால் அத்தகைய சாதகன் ஒருவன் முதலிலேயே ஆத்ம சாதனங்கள் புரிந்து பரஞானத்தை அடையப் பெற்றான பிறகு உலக வாழ்வில் ஈடுபடுதல் வேண்டும். ஈசுவர அனுபூதியைப் பெறுவது அவனது முதல் கடமை. அதன் பிறகு பொய்யும், புளுகும் நிறைந்துள்ள சமுதாய வாழ்க்கையில் அவன் ஈடுபடுதற்கிடையில் அதன் குறைபாடுகளால் அவன் பாதிக்கப்படமாட்டான். சேற்று மீன் சேற்றிலே வாழ்ந்திருப்ப

தற்கிடையில் அதன் மேனியின்மீது சேறு படிவதில்லை. அங்ஙனம் உலகில் வாழ்ந்திருப்பதற்கிடையில் உலகத்திலுள்ள தோஷங்களால் அவன் மலினம் அடைவதில்லை. அத்தகையவனுக்கு இவ்வையக வாழ்வு பாரமார்த்திகப் பெருவாழ்வாக மாறி அமைகிறது இவ்வுலகில் அமைந்திருக்கும் பொருளாசையும் போகத்தில் நாட்டமும் அவனை அணுகமாட்டா. ஆங்குப் பகவானும், பக்தியும், பக்தர்களுமே அவனுடைய காட்சிக்குப் புலப்படுகின்றனர். இதோ பாரும், நானும் ஒரு குடும்பியாகத்தான் வாழ்ந்து வருகிறேன்; எனக்கும் மனைவி உள்ளாள். சமைப்பதற்கு வேண்டிய சில பண்டபாத்திரங்களும் என்னிடத்தில் உள. நானும் திண்ணைத் தூங்கிச் சோம்பேறிகள் சிலருக்கு அன்னம் படைக்கிறேன். பக்தர்களுடைய நலனைக் குறித்து நானும் கவலைப்படுகிறேன். சான்று ஒன்று எடுத்துக் கொள்வோம். ஹபியின் தாயார் இடையிடையே இங்கு வருகிறார். அவர் நலனுற்று இருக்கவேண்டுமென்று நான் கவலைப்படுகிறேன்.''

பக்தர் ஒருவர் திரைலோக்கியரிடம் இங்ஙனம் இயம்புகின்றார்: "ஈசன் மானுடனாக அவதரித்து வருகிறதில்லை என்று தாம் இயற்றியுள்ள நூலில் எழுதியிருக்கின்றீர். நான் அதைப் படித்துப் பார்த்திருக்கிறேன். கிருஷ்ண சைதன்யர் அவதார மூர்த்தி என்று தாங்கள் எழுதியிருக்கின்றீர்கள்."

திரைலோக்கியர்: "ஏன் இப்படியெல்லாம் இயம்புகின்றீர்கள்? கிருஷ்ண சைதன்யர் தாமே தாம் அவதார மூர்த்தி அல்லர் என்று மறுத்திருக்கிறார். ஒரு தடவை பூரி ஸ்தலத்தில் அவருடைய பக்தராகிய அத்வைதரும் ஏனையோர்களும் கூடிக்கொண்டு கிருஷ்ண சைதன்யர் கடவுளின் அவதாரம் என்னும் கருத்துப்படப் பாடல் ஒன்று பாடினார்கள். அக்கருத்தைக் கேட்ட கிருஷ்ண சைதன்யருக்குப் பொறுக்க முடியவில்லை. அவர் தாமே அக்கருத்துக்கு ஆட்சேபம் பண்ணுகிற பாங்கில் அறை ஒன்றனுள் சென்று அதன் கதவை மூடிக் கொண்டார். கடவுள் மகிமைக்கு எல்லை இல்லை. பரமஹம்சதேவர் பகர்கிற பிரகாரம் பக்தன் ஒருவன் பரமனுடைய தங்குமிடமாகிறான். அறை ஒன்றனுள் தட்டுமுட்டுச் சாமான்கள் அழகாக வைக்கப்பட்டிருக்கின்றன. அதினின்று அவ்வீட்டுக்குச் சொந்தக்காரனுடைய செல்வம் அதற்குமேல் ஒன்றும் இல்லை என்று நாம் முடிவு கட்டலாமா?"

கிரீஷ்சந்திரகோஷர் இப்பொழுது பகர்ந்ததாவது: ''பிரேமை பக்தி ஒன்றே கடவுளின் நிஜசொரூபம் என்று பரமஹம்சதேவர் பகர்கின்றார். இத்தகைய பிரேமை பக்தி எந்தப் பக்தனிடத்திருந்து ஊற்றெடுத்துப் பாய்கிறதோ அத்தகைய மூர்த்தி ஒருவன் நமக்குத் தேவை. பசுவின் பால் அதன் மடியினின்று பொழிகிறது; ஆதலால் நமக்குப் பசுவின் மடி இன்றியமையாதது; பசுவின் ஏனைய உறுப்புக்களாகிய கால், வால், தலை ஆகியவைகளில் நாம் கருத்துச் செலுத்துவதில்லை."

திரைலோக்கியர்: ''கடவுளின் பிரேமை பக்தி என்னும் அருள் வெள்ளம் எண்ணிறந்த வாய்க்கால்கள் வழியாக விரைந்து பாய்கிறது. இறைவனிடத்துள்ள பேராற்றல் அளப்பரியதாம்.''

கிரீஷ்சந்திரகோஷர்: "இறைவனிடத்துள்ள பேராற்றல் அளப்பரியது என்பது உண்மை. ஆயினும் அவையாவும் அவரிடத்திருந்து பெருகி வருகிற பிரேமை பக்திக்கு நிகராகுமா?"

திரைலோக்கியர்: "வேண்டுமானால் ஆகாததை ஆகும்படி செய்யவல்ல திறமை இறைவனிடத்து உண்டு. அவர் திருவுளம் கொள்வாராகில் பிரேமை பக்தியினும் மிக்கது ஞானம் என்றோ யோகம் என்றோ விளக்கிக்காட்டும் திறமை அவருக்கே உளதாம்."

கிரீஷர்: ''ஆம். இக்கோட்பாட்டை நான் ஏற்றுக்கொள்கிறேன். அவித்தை என்னும் மகிமையொன்று இறைவனிடத்து இருக்கிறது. அதன் போக்கும் அலாதியானது."

திரைலோக்கியர்: ''அவித்தை என்பது ஒரு பொருளன்று. அது வெறும் மனநிலையாம். வெளிச்சம் இல்லாதிருப்பதற்கு அறிகுறி இருள். அத்தகைய இருள் ஒரு பொருளாகாது. பிரேமை பக்திக்கு நாம் பெரிய மதிப்புத் தருகிறோம் என்பது உண்மை. இறைவனுக்கு ஒரு துளியாயிருப்பது நமக்கு அளப்பரியதாயிருக்கும் பெருங்கடலாகும். அப்படியிருக்கையில் பிரேமை பக்தி கடவுளின் உச்ச நிலை

என்று இயம்புவீராகில் அதன்மூலம் அவருடைய மகிமைக்கு நீர் எல்லை கட்டுகின்றீர். அப்படிச் செய்வது பொருந்தாது."

பரமஹம்சதேவர் திரைலோக்கியரிடத்தும் ஏனைய பக்தர்களிடத்தும் இயம்பியதாவது: "ஆம், திரைலோக்கியர் கூற்றுப் பொருள் மிகப் பொதிந்ததாகும். அது ஒருபுறம் இருக்க, ஒரு திராம் சாராயம் என்னைத் தலைதிருகச் செய்கிறது. அப்படியிருக்கையில் சாராயக் கடையில் பீப்பாய் பீப்பாயாக இருக்கும் மதுபானங்களைப்பற்றிய கவலை எனக்கு எதற்கு? இறைவனுடைய எல்லையில் அடங்காத மகிமைகள் அனைத்தையும் நாம் அறிந்துகொள்ள முடியாது. அறிந்துகொள்ள வேண்டிய அவசியமும் இல்லை."

கிரீஷ்சந்திரகோஷர் திரைலோக்கியரிடம் கேட்ட கேள்வியாவது: "தாம் ஈசுவர அவதாரத்திலே நம்பிக்கை வைத்திருக்கின்றீரா?"

திரைலோக்கியர்: "ஈசுவரன் தன்னுடைய பக்தர்களின் பெருவாழ்வின்மூலம் தன்னுடைய மகிமைகளைத் தெரிவிக்கின்றான். அகண்டமாயுள்ள ஆற்றல் அதன் வல்லமைகளை மானுட வடிவத்தின் வாயிலாக விளக்கிக்காட்ட முடியாது. அது ஒருபொழுதும் சாத்தியப்படாது. அகண்டமாயுள்ள சக்திகளைத் தன் வடிவத்தின் வாயிலாக விளக்கிக்காட்ட மனிதனுக்கு ஒருபொழுதும் இயலாது.

"நாம் நம்முடைய சிறுவர்களைப் பிரம்ம கோபாலனாக வழிபடுவது சாத்தியம் ஆகிறது. அப்படியிருக்கையில் மஹாபுருஷர் ஒருவரை அவதாரம் என்று வணங்குதலில் தமக்கு என்ன ஆட்சேபம்?"

பரமஹம்சதேவர் திரைலோக்கியரிடம் இங்ஙனம் இயம்புகின்றார்: "இறைவன் அகண்ட சச்சிதானந்தம் என்றெல்லாம் வாதாடுவது எதற்காக? நான் உன்னைத் தீண்ட விரும்பினால் உன்னுடைய கையைமட்டும் தொட்டால் போதாதா? உடல் முழுவதையும் தீண்டுவது எதற்காக? நீ கங்கா ஸ்நானம் செய்ய விரும்பினால் அதற்கேற்ற ஒரு படித்துறை போதாதா? அப்படியல்லாது கங்கோத்ரியிலிருந்து கங்கா ஸாகரம் வரையில் அதில் நீராடவேண்டுமென அவசியமில்லை."

"அகங்காரம் அகலுமிடத்து மனிதன் படுகின்ற துன்பங்களனைத்தும் முடிவுறுகின்றன. சிறிதளவாவது அகங்காரம் மனிதனிடத்து எஞ்சியிருக்கும் வரையில் அவன் பேதங்களைக் காண்கின்றான். அத்தகைய அகங்காரம் அகலுமிடத்துப் பிறகு என்ன எஞ்சியிருக்கிறது என்று இயம்புதற்கு ஆள் யாரும் இல்லை. ஆகையினால் அகங்காரம் அற்ற நிலையைச் சொல்லால் விளக்கமுடியாது. எது இருக்கிறதோ அது முற்றிலும் தன்மயமாயிருக்கிறது. அகங்காரம் அகன்றுபோன பிறகு ஈசனுடைய சக்தியில் ஒரு சிறு பகுதி இந்த மனிதன் மூலமாகவும் மற்றொரு பகுதி அந்த மனிதன் மூலமாகவும் தோன்றியிருக்கிறது என்று சொல்லுதற்கு ஆள் இல்லை. சச்சிதானந்தக் கடல் தன்மயமாயிருக்கிறது. நான் என்னும் மட்பாண்டம் அந்தக் கடலினுள் புகுந்து கிடக்கிறது. அந்த மட்பாண்டம் இருக்கும் வரையில் கடல் நீர் இரண்டாகப் பிளவுபட்டது போன்று தென்படுகிறது. பாண்டத்தில் உள்ளிருக்கும் நீர் என்றும் புறத்தேயிருக்கும் நீர் என்றும் பாகுபடுத்த அது இடந்தருகிறது. மற்று, மட்பாண்டம் உடைக்கப்படுகிற பொழுது யாண்டும் இருப்பது ஒரே நீர் பரப்பாம். இந்நிலையையும் இருக்கிறபடி இயம்ப மனிதனுக்கு இயலவில்லை. சொல்லுதற்கு ஆள் எங்கே?"

சற்று நேரத்திற்குப் பிறகு பரமஹம்சதேவர் திரைலோக்கியரோடு சாமானியமான விஷயங்களைப் பற்றி உரையாடலானார்.

பரமஹம்சதேவர்: "நீவிர் இன்புற்றிருக்கின்றீர் அல்லவா?"

திரைலோக்கியர்: "ஆம் ஐயனே, நான் இன்புற்றிருக்கின்றேன். ஆனால் தங்களுடைய சன்னிதியிலிருந்து பிரிந்து போகும்பொழுது நான் பழைய ஆளாகக் கீழ்நிலைக்கு இறங்கி வந்து விடுவேன்.

பரமஹம்சதேவர்: "நீவிர் காலில் பாதரட்சை அணிந்திருக்கிறபொழுது முட்களுக்கிடையில் நடப்பதைக் குறித்துக் கவலைப்பட வேண்டியதில்லை. பரம்பொருள் ஒன்றே மெய் என்றும் ஏனைய யாவும் அதன் வெறும் தோற்றம் என்றும் அறிந்து கொண்டான பிறகு காமத்தைப் பற்றியோ காசு ஆசையைப் பற்றியோ கவலைப்பட வேண்டியதில்லை."

# எந்நாள் கண்ணி

(தாயுமானவர் இயற்றியது)

**9-18. பெண்ஆண் அலிஎனவும் பேசாமல் என் அறிவின்
கண்ணூடே நின்றஒன்றைக் காணுநாள் எந்நாளோ.**

ஆண், பெண் என்னும் வேற்றுமை உடலை எடுத்துள்ள ஜீவர்களுக்கிடையில் இருக்கிறது. அலி என்பது உடலமைப்பில் ஆண் என்றோ பெண் என்றோ நிறைநிலை அமையப்பெறாதிருப்பதாம். இத்தகைய பால் வேற்றுமை உடல் எடுத்துள்ள உயிர்கள் அனைத்துக்கும் பொதுவாம். பால் வேற்றுமை ஜங்கமங்களுக்கிடையில் வெளிப்படையாகத் தென்படுகிறது. ஆயினும், ஸ்தாவரங்களுக்கிடையிலும் ஆண்பால், பெண்பால் வேற்றுமை இருக்கிறது. இப்படி அமைந்துள்ள இரு பால்களின் சேர்க்கையால் அந்தந்த இனம் பெருகி வருகிறது. மானுட வர்க்கத்தில் சின்னஞ்சிறியவைகளாயிருக்கின்ற சிசுக்களுக்கிடையில் சரீர அமைப்பில் பால் வேற்றுமை வெளிப்படையாக அமைந்திருக்கிறதெனினும் அவைகளின் மனத்தகத்து அந்த வேற்றுமையுணர்வு வடிவெடுக்காதிருக்கிறது. நாள் ஏற ஏற ஒவ்வொரு ஜீவனும் தான் ஆண் எனவும் பெண் எனவும் வேற்றுமை உணர்வைப் பெறுகிறான். தேகத்தின் வளர்ச்சி பூர்த்தியாகின்றபொழுது பால் உணர்வும் உச்சநிலைக்கு வருகிறது.

பிறகு, உடலமைப்பில் தளர்வும், தேய்வும் உண்டாகின்றபொழுது பால் உணர்வும் தணிகிறது. விருத்தாப்பிய தசையில் அது பின்னணிக்குப் போய்விடுகிறது எனினும் சரீரத்தின் தோற்றத்தில் ஆண் என்றும் பெண் என்றும் வேற்றுமை நிலைத்திருக்கிறது.

ஆத்ம சாதனப் பயிற்சி அலாதியாகப் பண்பட்டுள்ள மானுட வர்க்கத்திற்கே உரியதாம். ஆத்ம சாதனத்தில் முன்னேற்றமடைய முயல்கிறவனுக்குப் பால் உணர்வையும் வேற்றுமையையும் வெல்லுவது முற்றிலும் அவசியமாகிறது. அதற்கு அடிப்படையாக உள்ள உடல் உணர்வை அல்லது தேகாத்ம புத்தியை வெல்லுவது முற்றிலும் அவசியமாகிறது. சிறு குழந்தைகள் இன்னும் தேகாத்ம புத்தியைப் பெறாதிருப்பதால் அவைகள் ஒன்று கூடிப் பால் உணர்ச்சி அடையப் பெறாமல் விளையாடுகின்றன. அது தெய்வீகப் பெருநிலை எனப் பாராட்டப்படுகிறது. அந்நிலையிலேயே நிலைத்திருப்பது ஆத்ம சாதகனின் நோக்கமாகிறது. அத்தகைய அதீத நிலையில் ஆத்ம சாதகன் நிலைத்திருப்பதன் விளைவாக அவனுடைய இந்திரியங்கள் தூய நிலையில் காப்பாற்றி வைக்கப்படுகின்றன. அத்தூய நிலையில் அவன் உறுதிபெறும்பொழுது அவனுடைய அறிவு தெளிந்ததாகவும் நுண்ணியதாகவும் திருந்தியமைகிறது. இறுதியில் அத்தூய அறிவே ஞானக்கண்ணுகை மேன்மையுறுகிறது. அப்பெரிய நிலையை எட்டுகின்றபொழுது ஆத்ம சாதகன் தான் ஆத்மா எனவும் உடல் அல்லன் எனவும் தான் படைத்துள்ள உடல் தன் கைவசம் உள்ள ஒரு கருவி எனவும் அறிய வருகிறான். அந்நிலையை எட்டுகின்ற பொழுது ஆத்மாவாகிய தனக்கும் தன் தலைவனாகிய பெரிய பொருளுக்கும் இடையிலுள்ள இணக்கத்தை நன்கு அறிய வருகிறான். யாண்டும் மெய்ப்பொருளாயிருப்பது பரமாத்மன். அதன் கிரணங்களாய் அமைந்திருப்பவைகள் ஜீவாத்மாக்கள். இந்தப் பரமாத்மனின் புறத்தோற்றமே பிரபஞ்சம் என்னும் பெயர் பெறுகிறது. இந்தப் பிரபஞ்சத்தின் கூறுகளாக அமைந்திருப்பவைகள் உயிர்வகைகள் படைத்திருக்கின்ற உடல்களாம். வெவ்வேறு ஜீவர்களுக்கிடையில் அமைந்துள்ள வேற்றுமைகளனைத்தும் உடலைச் சார்ந்திருக்கின்றன. உடலினுள் வீற்றிருக்கும் ஆத்மாவானவன் ஆணல்லன், பெண்ணல்லன், அலியுமல்லன். அந்த ஆத்மா தானே சிவமாக இலங்குகிறான். இந்த உண்மையை அனுபூதியில் அறிந்துகொள்வது மானுட ஜன்மத்தின் தலைசிறந்த நோக்கமாம். இப்பெருநிலையை இக்கண்ணி வெளிப்படையாக விளக்குகின்றது.

**9-19. நினைப்பும் மறப்பும் அற நின்றபரஞ் ஜோதி
தனைப்புலமா என் அறிவில் சந்திப்பது எந்நாளோ**

நினைப்பு என்பது மனதின் உடன்பாட்டுச் செயலாம். விழித்திருந்து மனது வினையாற்

றும் பொழுது அது விதவிதமான நினைவுகளை எடுத்துக்கொள்கிறது. நினைவு என்பது சித்தத்தில் உண்டாகின்ற தீர்மானம், உணர்வு, பாகுபாடு முதலியனவாம். மனிதன் விழித்திருந்து வியவகாரங்களை நடத்துகின்ற பொழுது இம்மூன்று கோட்பாடுகளை அடிப்படையாக வைத்துக்கொண்டு விதவிதமான முறைகளில் மனது இயங்குகிறது. அப்படி இயங்கும் பொழுது அது பெரிதும் ரஜோகுணத்திலும் சத்துவ குணத்திலும் தோய்ந்து நிற்கிறது. இனி இதே மனது தமோகுணத்தின் ஆதிக்கத்துக்கு உட்படுகின்றபொழுது அதுசெயலற்றுச் சும்மா கிடக்கின்றது. அந்நிலை மறப்பு எனப் பகரப்படுகிறது. அதில் மனது செயலற்றுக் கிடக்கிறது. அதன் விளைவாக ஜீவ வியக்தி மறைந்துபட்டுப் போகிறது. கால, தேச, நிமித்த மயமாயிருக்கும் இப்பிரபஞ்சமும் தோற்றத்திலில்லாது போகிறது. மனதின் இந்த நிலையானது சுஷுப்தி அவஸ்தை எனப் பகரப்படுகிறது. இந்நிலையில் ஜீவாத்மனே சூனியமாய்ப் போய்விட்டான் போன்று தோன்றுகின்றான். ஆனால் அழிந்துபட்டுப் போனது மீண்டும் வடிவெடுக்காது. உறங்குகிற மனிதன் விழித்தான பிறகு ‘நன்றாகத் தூங்கினேன்’ என்கிறான். தூக்கத்துக்கு ஆத்மாவானவன் சாட்சியாய் இருந்ததனால் தன்னுடைய அனுபவமாகிய உறக்கத்தை விளக்க வல்லவனாகின்றான். ஆக, உறக்கம் என்பது மனதுக்கு உறக்கமேயாம். ஆத்மா யாண்டும் உறங்காதிருக்கிறான். அத்தகைய ஆத்மா சுயஞ்ஜோதியாக இலங்குகிறான். எப்பொருள் தன்னைத்தானே விளக்கிக்கொள்கிறதோ அதுசுயஞ்ஜோதியேயாகும். சூரியனை அதற்குச் சான்றாக எடுத்துக்கொள்ளலாம். ‘நான் இருக்கிறேன்’ என்று ஆத்மா தன்னைத் தானே அறிந்துகொள்கிறான். தான் இருப்பதைத் தனக்கு விளக்கிக்காட்ட சூரிய வெளிச்சமோ சந்திர வெளிச்சமோ மின்னலோ நட்சத்திரமோ அக்கினியோ தேவையில்லை.

மனது தெளிவடைந்து வருதற்கேற்ப ஆத்மப் பிரகாசத்தை அது வாங்குகிறது. தெளிந்த நிலையிலும் மலினப்பட்ட நிலையிலும் ஆத்மப் பிரகாசம் மனதின் மீது பிரதிபலித்துக் கொண்டிருக்கிறது. அந்தப் பிரகாசத்தை ஜீவாத்மனுக்கு உரிய அறிவு என்கிறோம். மனது ஒடுங்குதற்கேற்ப அதனிடத்துப் பிரகாசிக்கின்ற அறிவும் அந்த அறிவுக்கு அறிவாய் இருக்கின்ற ஆத்மப் பிரகாசமும் ஒன்றுபடுகின்றன. அங்ஙனம் அவை இரண்டும் ஒன்றுபட்டுவருகிறவேளையில் ஆத்ம சாதகன் பலப்பல தெய்விகக் காட்சிகளைக் காண்கின்றான். ஆங்கிலத்தில் இந்நிலை Mysticism என மொழியப்படுகிறது. அப்படி அனுபவிக்கிற சாதகன் Mystic என அழைக்கப்படுகிறான். அந்தந்தச் சாதகனுடைய சன்மார்க்கம், ஐதிகம், சம்பிரதாயம் முதலியவைகளுக்கேற்ற இந்தத் தெய்விகக் காட்சியானது விதவிதமான வடிவெடுக்கின்றது. சைவ சம்பிரதாயத்தில் ஊறியிருக்கிறவன் பெறுகிற அனுபவங்களில் பெரும் பகுதி சிவனை ஒட்டியதாயிருக்கிறது. அங்ஙனமே வைஷ்ணவ சமயத்தை அனுஷ்டிக்கின்ற சாதகன் விஷ்ணுவை ஒட்டிய அனுபவங்களைப் பெறுகிறான். புறமதங்கள் எனப்படும் இஸ்லாமிய மதத்திலும் கிறிஸ்துவ மதத்திலும் அனுபூதிமான்கள் (Mystics) பலர் தோன்றியிருக்கிறார்கள். அன்னவர்கள் பெறுகின்ற அனுபூதிகள் யாவும் அவர்கள் எந்தெந்தச் சம்பிரதாயங்களில் ஊறியிருந்தார்களோ அவைகளைத் தழுவியவைகளாகும்.

இத்தகைய சவிகல்ப சமாதியில் நின்றுவிடுகிறவர்களுக்கிடையிலே சமய பேதத்துக்கு இடமுண்டு. அவரவர் அனுபவமே பெரியதென்று அந்தந்தச் சமயவாதிகள் நிர்ணயிப்பார்கள். இனி, எங்ஙனம் சுஷுப்தி அவஸ்தை அனைவருக்கும் பொதுவாயிருக்கின்றதோ அது போன்று நிர்விகல்ப சமாதியிலும் பேதம் ஏதும் இல்லை. எனவே, மதங்கள் யாவும் நிர்விகல்ப சமாதியில் ஒன்றுபடுகின்றன என்பது வெளிப்படை. அந்நிலையில்தான் அவன் உண்மையில் இறைவன் அருளுக்குச் சொந்தமாகிறான். அகங்கார மமகாரம் சிறிதளவாவது எஞ்சியிருக்கிறபொழுது சாதகன் அடைகிற அனுபவம் முழுதும் சவிகல்ப சமாதி எனப் பெயர் பெறுகிறது. அகங்காரமும் மமகாரமும் முழுதும் அழிந்துபோன பிறகு எஞ்சியிருப்பது நிர்விகல்ப் சமாதி. ஈண்டுத் தாயுமானவர் செய்கிற விண்ணப்பம் சவிகல்ப சமாதியின் அனுபவத்தைக் குறிக்கிறது. இதுவே இக் கண்ணியின் உட்கருத்தாம்.

---

# மாதர் தமைப் போற்றுவோம்

( சுவாமி விவேகானந்தர் )

ஒவ்வொரு ஜீவனிடத்தும் உள்ள ஆத்ம சொருபம் ஒன்று என்று வேதாந்தம் முழங்கு கிறது. வேதாந்தம் தோன்றிய நாட்டில்தான் ஆண்களுக்கும் பெண்களுக்கும் இடையில் வேற்றுமை நிறைந்திருக்கிறது. இத்தகைய வேற்றுமை ஏன் இருக்கிறது என்பதைத்தான் புரிந்துகொள்வது சற்றுக் கடினமாக இருக் கிறது. பெண்களைக் குறை கூறி வருகின்றீர் கள். அவர்களுடைய முன்னேற்றத்துக்காக நீங்கள் என்ன செய்திருக்கின்றீர்கள்?

பெண்களுக்குரிய மரியாதை கொடுத்து அவர்களை முறையாகப் போற்றத் தெரிந்து கொண்ட நாடு முன்னேற்றமடைகின்றது. பெண்களைப் போற்ருத நாடு முன்னேற்றம் அடைந்ததில்லை. இனியும் பெண்களைப் போற் ருத நாடு முன்னேற்றம் அடையப்போவதில்லை. பெண்களெல்லாரும் பராசக்தியின் சொருபங்க ளாவார்கள். அவர்கள் முன்னேற்றம் அடையா விட்டால் நாடு எந்த விதத்திலும் முன்னேற்ற மடைய முடியாதென்பது சிந்தனைக்குரிய விஷயமாகும்.

எத்தனையோ பிரச்னைகள் இருக்கலாம். ஆனுல் அவைகள் யாவற்றையும் கல்வியைக் கொண்டு அகற்றிவிடலாம். முதலில் பெண் களுக்குத் தக்க கல்வியைத் தந்து அவர்கள் போக்கில் வளர விட்டுவிடுங்கள். அவர்களுக்கு எத்தகைய சீர்திருத்தங்கள் வேண்டுமென் பதை அவர்களே அறிவார்கள். அவர்களுக் குரிய பிரச்னைகளை அவர்களே தீர்த்துக் கொள்கின்ற நிலையில் அவர்கள் வைக்கப்பட வேண்டும். அவர்களுடைய பிரச்னைகளைத் தீர்ப்பதற்கு நீங்கள் யார்? நீங்கள் அவர்களைப் படைத்த கடவுளா? உங்கள் காரியத்தை நீங்கள் பார்த்துக்கொள்ளுங்கள்.

ஆன்மீகத்தை அடிப்படையாகக் கொண்ட கல்வி பெண்கல்வியின் மையமாக அமைய வேண்டும். ஆன்மீகத்துக்கு அனுசரணையாக மற்றப் பயிற்சிகள் அமையவேண்டும். ஆன் மீகப் பயிற்சி, பண்பாட்டை உருவாக்குதல், கற்பைக் காப்பாற்றுதல் ஆகிய இவைகளில் கருத்து மிகச் செலுத்தப்படுதல் வேண்டும்.

சீதையின் அடிச்சுவட்டைப் பின்பற்றி இந்தியப் பெண்மணிகள் வளரவேண்டும். அது ஒன்றே அவர்கள் வளர்வதற்கு உற்ற வழி யாகும். நவீன நாகரிகம் என்ற முறையில் சீதை காட்டிய லட்சிய வாழ்க்கையினின்று நம் பெண்களை விலக்கி எடுக்கும் செயல் நிகழு மானுல் அது உடனடியாக நிச்சயம் தோல்வி அடையும். இதை நாம் இன்று கண்டு வருகின் ரேம்.

இந்துப் பெண்மணிகள் கற்பு என்ருல் என்ன என்பதைச் சுலபமாக அறிவார்கள். அது அவர்கள் பாரம்பரியச் செல்வமாகும். இப் பொழுது நாம் முதலில் அவர்களுடைய உள் ளத்தில் எல்லாவற்றுக்கும் மேலானது கற்பு என்பதைப் பதியச் செய்யவேண்டும். கற் பைக் காப்பாற்றுவதன் மூலம் பண்பாட்டில் உறுதி பெறுவார்கள். உறுதி வாய்ந்த பண் பாடானது அவர்கள் வாழ்க்கையின் எல்லா நிலைகளிலும் மேன்மையடைய உதவுகின்றது. மணம் புரிந்துகொண்டோ பிரம்மச்சாரிணியாக இருந்தோ அவர்கள் வாழ்க்கை நடத்தலாம். எந்த நிலையில் வாழ்க்கை நடாத்தினுலும் கற்பினின்றும் ஓர் அணுவும் வழுவாதிருக்கும் மனத்திண்மையைப் பெறுவார்கள். இத்தகைய பண்புடன் நவீன விஞ்ஞானத்தையும் அவர் களுக்குக் கற்பிக்கவேண்டும். தங்களுக்கும் மற்றவர்களுக்கும் பயன்படக்கூடிய விஷயங்க ளெல்லாம் அவர்களுக்குக் கற்பிக்கப்படவேண் டும்.

நம் நாட்டில் இத்தகைய வாழ்க்கைமுறை உடைய பெண்கள் உருவாகவேண்டும். அப் பொழுதுதான் சீதை, சாவித்திரி, கார்க்கி போன்ற இலட்சியப் பெண்மணிகள் நம் நாட் டில் மீண்டும் தோன்றுவார்கள்.

பெண்கள் உயர்த்தப்படுவார்களானுல் அவர் களால் வளர்க்கப்படும் குழந்தைகளும் பெரு மைக்குரிய மக்களாக மாறி நாட்டுக்குப் பெருமை தேடித் தருவார்கள். அப்பொழுது பண்பாடு, அறிவு, ஆற்றல், பக்தி ஆகியவை இந்நாட்டில் எழுச்சியுறும். இப்பொழுதுள்ள சிறுமைகள் அழிந்து பட்டுப்போகும்.

# ஞானமார்க்கம்

(ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் 1983 இல் திருப்பராய்த்துறை ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவன அந்தர் யோகத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு)

தங்கத்தால் செய்யப்பட்ட நகைகள் தங்க மயமாகத்தான் இருக்கும். அவைகள் வெள்ளி மயமாகவோ இரும்புமயமாகவோ ஆகிவிட மாட்டா. பிரபஞ்சத்திலுள்ள பொருள்களனைத் தும் எந்த மூலப்பொருளிலிருந்து வந்த வையோ அந்த மூலப்பொருளைச் சரியாக அறிந்துகொள்வதுதான் நல்லறிவு எனப்படும்.

எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு

என்பது குறள். வடிவத்தைக் கண்டு மயங் காது வடிவத்தின்கண் இலங்கும் மெய்ப் பொருளை உள்ளபடி அறிய முயலவேண்டும்.

மக்களாகிய நாம் அனைவரும் பரம்பொருளிட மிருந்து வந்தவர்களாவோம். இவ்வுண்மையை எப்படியோ மறந்துவிட்டோம். நாம் பரம் பொருள் சொரூபம் என்பதைத் திரும்பவும் ஞாபகத்துக்குக் கொண்டுவருவதுதான் ஞான மார்க்கமாகும். பரம்பொருள் சத் சித் ஆனந்த மயமாக இருக்கின்றார். அவர் யாண்டும் இருக் கின்றார். அறிவு மயமாக இருக்கின்றார். ஆனந்தமாக இருக்கின்றார். அப்பரம்பொருளி லிருந்து வந்த நாம் சச்சிதானந்த சொரூபமா வோம். தங்கத்தினால் செய்யப்பட்ட நகைகள் தங்க மயமாக இருப்பன போன்று நாம் சச்சி தானந்த சொரூபமாக இருக்கின்றோம். நம் மைப்பற்றிய விசித்திரம் என்ன என்றால் நாம் சத் சித் ஆனந்த மயமாக இருந்துகொண்டு சச்சிதானந்தத்தைத் தேடி அலைகின்றோம். அதற்குத்தான் மாயை என்று பெயர். மயக்கத் தில் மூழ்கிக்கிடக்கும் நாம் நம்மிடத்திலுள்ள பொருளைப் புற உலகில் தேடி அலைந்து திரி கின்றோம்.

சத் என்பது யாண்டும் இருப்பது. ஒரு காலத்தில் இருந்து இன்னொரு காலத்தில் இல்லாது போய்விட்டால் அது சத் அன்று. ஓர் இடத்திலிருந்து இன்னோர் இடத்தில் இல்லாமல் போய்விட்டாலும் அது சத் ஆகாது. காரண காரியமாகத் தோன்றிக் கொண்டிருக் கும் பொருளும் சத் ஆகாது. பிரபஞ்சம் சத் பொருளாகத் தோன்றுகிறது. ஆனால் அது சத் அன்று. காலதேச காரண காரியங்களுக்கு உட்பட்டதாக இருப்பதால் அது சத் பொருளா காது. காலத்தில் எது அடிபடுகின்றதோ, ஓர் இடத்தில் இருந்து மற்றோர் இடத்தில் எது இல்லாமல் போகின்றதோ அது சத் பொருளாகாது. வானத்தில் தோன்றும் வான வில் சூரிய வெளிச்சம், நீர்த்திவலை ஆகிய காரணங்களால் உண்டாகிறது. அவற்றில் எது இல்லாமல் போய்விட்டாலும் வானவில் மறைந்து போய்விடும்.

நம்முடைய சரீரம் சத் பொருளாகாது. நாம் சரீரத்தில் வாழ்ந்து வருகின்றோம். சரீரத்தை நித்தியமானதென்று எண்ணுவோமானால் அது தவறாகும். சரீரம் ஒரு காலத்தில் இருக்கிறது. மற்றொரு காலத்தில் மறைந்துபட்டுப் போகி றது. ஓர் இடத்தில் இருக்கும்பொழுது அது மற்றோர் இடத்தில் இருப்பதில்லை. ஒரு காரணத்தை முன்னிட்டு இருந்து மற்றொரு காரணத்தை முன்னிட்டு அது இல்லாமல் போகிறது. ஆகையால் சரீரம் சத் பொருள் ஆகாது. தாற்காலிகமாக அது சத் பொருள் என்று கருதுகின்றோம். அப்படிக் கருதுவதற் கேற்ப அதைப் பயன்படுத்துகின்றோம். நிரந் தரமாக அதனோடு இருப்போம் என்று எண் ணுவோமானால் அது தவறு.

மக்கள் மட்டுமல்லர், உயிர்கள் யாவும் உணவை நாடி அலைகின்றன. உணவின் மூலம் உடல் அழியாது காப்பாற்றி வைக்கப்படுகின் றது. உடலைக் காப்பதன் மூலம் நம் நிஜசொரு பத்தைக் காப்பாற்றுகின்றோம் என்ற மயக்கத் தில் இருந்து வருகின்றோம். நாம் எவ்வளவு நாள் சரீரத்தைக் காப்பாற்றி வைத்தாலும்அது நிரந்தரப் பொருளாகாது. தகனமாகிக்கொண் டிருப்பதால் அதற்குத் தேகம் என்ற பெயர் வந்துள்ளது. ஜீரணமாகிக் கொண்டிருப்பதால் அது சரீரமாகிறது. சரீரத்தை உபசாரத்திற் காக மெய் என்று கூறுகின்றோம். 'பொய் எல்லாம் ஒன்றாகப் பொருத்தி வைத்த பொய் உடலை மெய் என்றால் மெய்யாய் விடுமோ பராபரமே' என்பது தாயுமானவர் வாக்கு.

பஞ்சபூதங்களால் ஆனது சரீரமாகும். ஆசை அவற்றை இணைத்து வைத்துக் கொண்டிருக்கிறது. ஆசை அடிபட்டுப் போகும்பொழுது பஞ்சபூதங்களும் பிரிந்து போய்விடுகின்றன. அப்பொழுது சரீரம் என்று சொல்வதற்கு ஒன்றும் இருப்பதில்லை. சத் சொருபமாக இருக்கின்ற நாம் சரீரத்தைத் தாற்காலிகமாகப் பயன்படும் ஒரு கருவியாகக் கருதவேண்டும். அதை நிரந்தரமாகக் கருதக்கூடாது. அப்பொழுதுதான் சரீரப்பற்றுக் குறையும். சரீரப் பற்றுக் குறையும் பொழுதுதான் ஆன்மீகப் பற்று ஏற்படுகின்றது.

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு — என்பது குறள்.

உலகப்பற்றும், உடல் பற்றும் போகின்ற அளவுதான் ஞானத்திற்கு நாம் தகுதியுடையவர்களாகின்றோம். பொய்யான உடலை மெய் என்று சொல்லிக் கொள்ளலாம். ஆனால் அது நித்தியமானதன்று என்று அறிந்துகொள்ள வேண்டும். உயிர்கள் அனைத்தும் உணவைத் தேடி அலைவது உடலைப் பாதுகாப்பதற்காக ஆகும். உயிர்கள் பரிணாமம் அடைவதற்கு உடல் உதவுகின்றது. சிற்றுயிர் பேருயிராகப் பரிணமிக்கும் பொழுது அதற்கேற்ப உடல் மாறியமைகின்றது. உடல் மாறியமைவதோடு, மனமும் தோற்றத்துக்கு வந்துகொண்டே இருக்கின்றது. மனம் முற்றிலும் மனிதனிடத்துத் தோற்றத்துக்கு வந்திருக்கின்றது. இனி, மனிதன் தன் மனதை உயர்த்திக்கொள்வதன்மூலம் தான் முன்னேற்றமடைய முடியும். மனதில் புதைந்து கிடக்கும் அறிவுக்கு இயல்பு என்கின்றோம். இயல்பு நல்லதா கெட்டதா என்று பாகுபடுத்துகின்ற அறிவுக்கு விவேகம் என்கின்றோம். நல்லதை வாழ்க்கை மயமாக்கி நலம் நிறைந்தவர்களாக நாம் மாறி அமைவதற்குப் பயன்படும் அறிவை ஞானம் என்கின்றோம்

நவீன காலத்தில் வாகனங்களை ஆண்டு தோறும் புதியது புதியதாக மாற்றி அமைக்கின்றார்கள். கல், புல்லிலிருந்து மனிதனுடைய நிலை வரை உடலை மாற்றிக்கொண்டே வருவது இயற்கையின் பெரிய செயலாகும். இவ்வுடல் மாறுதலைத்தான் பரிணாமம் என்கின்றோம். பரிணாமத்தின் மூலம் உயிர்களின் ஆசை நிறைவேறி வருகின்றது. உயிர்கள் கொண்டுள்ள ஆசைக்கு உடல் இடைஞ்சலாக இருந்தால்அவ்வுடலை மாற்றி ஆசைக்கு அனுகூலமாக உடலை அமைப்பது இயற்கையின் பாங்கு. எல்லாவிதமான சரீரங்களையும் எடுத்தானபிறகு திருத்தி அமைக்கப்பட்ட சரீரமாக மானுட சரீரம் வந்தமைந்துள்ளது. மானுட சரீரத்துக்கு மேல் சரீரத்தைத் திருத்தியமைக்க முடியாது. மானுட சரீரம் அவ்வளவு அற்புதமானது. மனிதனாகப் பிறந்த பின்பு மனதைத் திருத்தி அமைப்பதில்தான் முன்னேற்றம் அமைகின்றது. மேல் நிலை அடையும் பொருட்டு எத்தனையோ சரீரங்களை எடுத்தாய்விட்டது. தாவர ஜங்கமமாகிய எல்லாப் படித்தரங்களிலும் உடலை எடுத்து இறுதியில் மானுட உடலை எடுத்திருக்கின்றோம். இந்த மானுட உடலைப் போகத்துக்கு உரிய கருவியாகக் கருதாது பரத்தை அடைவதற்காக அதைப் பயன்படுத்த வேண்டும்.

உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு
ஆலயம்
வள்ளல் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளா மணிவிளக்கே

என்பது திருமூலர் திருமந்திரமாகும். அநித்தியமான உடலை இறைவனுடைய தேவாலயமாகக் கருதி அதை நல்லபாங்கில் பாதுகாக்க வேண்டும். உள்ளத்தை இறைவனுக்குரிய கோயிலாக அமைக்கவேண்டும். காமம், குரோதம், மோகம், மதம், மாச்சரியம் என்ற கேடுகளை உள்ளத்திலிருந்து அகற்றிவிட்டால் உள்ளம் இறைவன் உறைவதற்கேற்ற கோயிலாகிறது. ஐம்புலன்கள் விஷயாதிகளை உள்ளத்தில் சேர்ப்பதற்குப் பதிலாக ஐம்புலன்கள் ஆன்ம ஒளியை உள்ளத்தில் உண்டாக்க உதவ வேண்டும். பிரபஞ்சத்தினுடைய வெளித்தோற்றத்தில் புலன்கள் நம்மை மயங்கும்படி செய்யுமானால் அவைகள் நமக்குப் பொய்ப்பொருளைக்காட்டித் தருகின்றன. எனவே அவைகள் கள்ளப்புலன்கள் ஆகின்றன. பிரபஞ்சத்துக்கு அப்பால் பிரபஞ்சத்துக்கு அடிப்படையாக இருக்கும் மெய்ப்பொருளைப் புலன்கள் ஐந்தும் விளக்கிக் காட்டுமானால் அவைகள் காளாமணி விளக்குகள் ஆகின்றன.

அதாவது சிவசொரூபத்தைக் காட்டித்தரு கின்ற ஒளிமயமானவை ஆகின்றன.

உடல் நீர்க்குமிழி போன்றது. எக்கணத் தில் வேண்டுமென்றாலும் அது அழிந்து போகும். இப்பொழுது உள்ள உடல் அழிந்து போய்விட்டால் மற்றோர் உடல் வரும். ஆசை இருக்கும் வரையில் சரீரம் தோன்றிக் கொண்டே இருக்கும். ஆசைகளை நிறைவேற் றிக் கொள்வதற்காக ஓயாது சரீரங்களை எடுத் துக்கொண்டு இருக்கவேண்டும். ஆசை அறவே நீங்கிய பின்பு சரீரம் எடுக்க வேண்டிய அவசியமில்லை. அதைத்தான் முக்திநிலை என்கின்றோம். ஆசையினின்று விடுதலை அடைந்த நிலையே முக்தியாகும். அஞ்ஞானத் தினால் ஆசை வந்தது. ஆசையை ஆராய்ந்து பார்த்தால் அசத்தாக உள்ள பிரபஞ்ச சம்பந் தமாக ஆசை இருப்பது தெரியவரும்.ஆசையை ஆராய்ந்து பார்க்கப் பார்க்க நம் சிறுபிள்ளைத் தனம் நமக்கு விளங்கும். உலகின்மீது வைத் துள்ள பற்றைத் தெய்வப் பற்றாக மாற்றுவது ஆத்ம சாதனமாகும். தெய்வப் பற்று வளர வளர உலகப் பற்றுத் தானாகவே அழிந்து போகின்றது. சிறுவயதில் நாம் என்னென் னவோ ஆசைகளை வைத்திருந்தோம். ஆசை களை எல்லாம் ஆராய்ந்து பார்த்தால் நம் முடைய சிறுபிள்ளைத்தனம் நமக்கு விளங்கும். அப்பொழுது நாம் பெற்றிருந்த மனநிலை சரீரத்தை ஒட்டியதாகும். சரீரத்தில் நாம் வாழ்ந்திருக்க வேண்டும். ஆனாலும், அது எந்த க்ஷணத்தில் வேண்டுமானாலும் அழிந்து போக லாம். அதைப்பற்றி நாம் கவலைப்படக்கூடாது. 'ஞானிக்கு இல்லை இன்பமும் துன்பமும்' என் பது கோட்பாடு. சரீரத்தை ஒட்டிய இன்பமும் துன்பமும் ஞானிக்கு இல்லை. நாம் சத்சொரூ பம், நாம் அசத்தாகிய உடலில் வாழ்ந்து வரு கின்றோம். இந்த வாழ்க்கையில் நம் அறிவைப் பல துறைகளில் வளர்த்து வருகின்றோம். ஒவ்வோர் உயிரும் தன் தன் போக்கில் தன் அறிவை வளர்த்து வருகின்றது. தாவரங் களாக இருக்கின்ற செடி, கொடி. மரங்களும் அறிவை வளர்த்து வருகின்றன. செடிகளை வரிசையாக வைத்து மூன்று பக்கங்களிலும் நிழல் இருக்கும்படி செய்து ஒருபக்கம் மட்டும் சூரிய வெளிச்சம் இருக்கும்படி அடைப்பு உண் டாக்கினால் சூரிய வெளிச்சத்தை நாடி அவை கள் கிளைகளை நீட்டும். அப்படிச் சூரிய வெளிச் சத்தை நாடிப்போவது அவைகளிடத்துள்ள அறிவாகும். இங்ஙனம் எல்லா உயிர்களும் அறிவை வளர்க்கவும் சித்சொரூபத்தில் நிலை பெற்று இருக்கவும் முயலுகின்றன. இன்னும் அனைத்து உயிர்களும் ஆனந்தத்தை நாடி அலை கின்றன. இன்புற்று இருப்பதற்காக மனிதன் படாத பாடுபடுகின்றான். சத் சித் ஆனந்தம் நம்முடைய உண்மை சொரூபம். சத் சித் ஆனந்தத்தை அறிவதுதான் ஞானம். நாம் இதுவரையில் எடுத்த பிறவிகள், எடுத்த முயற்சிகள் அனைத்தும் உண்மையை அடிப் படையாகக் கொண்டவைகள் அல்ல. உண்மை யில் நாமே சச்சிதானந்தம். நாம் சச்சிதானந்த மாக இருக்கின்றோம் என்பதை அறிந்து கொள்ளாது புற உலகில் ஆனந்தத்தைத் தேடி அலைகின்றோம். கஸ்தூரி மானிடத்தில் தக்க பருவம் வரும்போது கஸ்தூரி வாசனை உண்டா கின்றது. அந்த மான் அவ்வாசனை எங் கேயோ இருந்து வருவதாக எண்ணிக்கொண்டு காடெல்லாம் அலைகின்றது. அந்த மான் போன்று ஆனந்தம் நம்மிடத்திருக்க ஆனந் தத்தைத் தேடிப் புற உலகிற்குச் செல்கின் றோம். பல பிறவிகளில் புற உலகில் ஆனந் தத்தைத் தேடி ஏமாற்றம் அடைந்துகொண்டே வருகின்றோம். புற உலகத்தில் தேடிய ஆனந் தத்தை நம்மிடத்தில் தேடும்பொழுதுதான் அது நமக்கு உரியது ஆகின்றது.

அழியாத ஆத்ம சொரூபத்தை அழிந்து போகும் பிரபஞ்ச மயமாக எண்ணிக்கொண்டு இருக்கின்றோம். அறிவு சொரூபமாக இருக் கின்ற நாம் புறவுலகில் அறிவைத் தேடுகின் றோம். நம்மிடத்தில் இருக்கின்ற மெய்ப் பொருளை அறிந்துகொள்ளாது பல பிறவி களில் நாம் அலைந்து திரிந்தது நாம் செய்த பிழையாகும். மெய்ப்பொருள் நம்மிடத்தில் இருக்கிறது என்பதற்குப் பிரமாணம் என்ன? அயர்ந்த உறக்கம் அதற்குச் சிறந்த பிரமாண மாக இருக்கின்றது. நனவு, கனவு, உறக்கம் ஆகியவற்றைப் பற்றி ஆராய்ந்தால் நம்மைப் பற்றிய உண்மை நமக்கு விளங்கும். நம்மைப் பற்றிய உண்மையை நாம் அறிகின்றபோது ஞானமார்க்கத்தைக் கடைப் பிடிப்பதற்குத்

தகுதி உடையவராகின்றோம்.

விழிப்பு நிலையில் புறஉலகில் உள்ள பொருள்களில் இன்பம் இருப்பதாக எண்ணிப் புறவுலகில் அலைந்து திரிகின்றோம். சொப்பனத்தில் புறவுலகை ஒதுக்கி வைத்துவிட்டு அவ் உலகத்திற்கு நிகராக மனம் செய்கின்ற கற்பனை உலகில் அலைந்து திரிகின்றோம். கனவில்லாத அயர்ந்த உறக்கத்தில் ஜடம்போன்று மனிதன் தன்னை மறந்த நிலையில் இருக்கின்றான். அயர்ந்த உறக்கத்தில் சரீரம் இருந்தும் சரீர ஞாபகம் இல்லை. அந்நிலையில் பிரபஞ்சம் இருந்தும் பிரபஞ்சத்தைப்பற்றிய ஞாபகம் இல்லை. கால தேச நிமித்தம் இல்லை. கால தேச நிமித்தத்திற்கு ஆங்கு இடமில்லை. நாம் தேடிய கல்வி, செல்வம், பதவி ஆகியவற்றிற்கெல்லாம் ஆங்கு இடமில்லை. அவையாவும் அந்நிலையில் நம்மைவிட்டுப் போய்விடுகின்றன. அயர்ந்த உறக்கம் சூனியம்போன்று ஆகிவிடுகின்றது. அந்நிலையில் ஜீவர்களுக்கிடையில் வித்தியாசம் எதுவும் இல்லை. தாவரம் தூங்குகின்றது; பறவைகள் தூங்குகின்றன. விலங்குகள் தூங்குகின்றன; மனிதனும் தூங்குகின்றான். அயர்ந்த உறக்கத்தில் யாவும் பிரம்மசொரூபத்தில் இருக்கின்றன. அதுதான் நம்முடைய நிஜநிலையாகும். விழிப்பு நிலையில் ஆனந்தம் பெறுவதற்குப் புறஉலகை நாடுகின்றோம். நாம் தேடியது புறஉலகத்தில் கிடைத்தால் இன்பம் அடைகின்றோம். நாம் தேடியது புறஉலகில் கிடைக்காவிட்டால் துன்பம் அடைகின்றோம். அயர்ந்த உறக்கத்தில் துன்பத்திற்கு இடமேயில்லை. அயர்ந்த உறக்கத்தில் உண்டாகும் அனுபவத்தை விழிப்பு நிலையில் நாம் பெற்றுவிடுவோமானால் நாம் நிறைஞானி ஆகிவிடுகின்றோம். அயர்ந்த உறக்கத்தில் நாம் பெற்ற இன்பம் நம்மிடத்தில் உள்ள இன்பமாகும்.

"ஆங்காரம் உள்ளடக்கி ஐம்புலனைச் சுட்டறுத்துத் தூங்காமல் தூங்கிச் சுகம் பெறுவது எக்காலம்" என்பது நம்முடைய உண்மையான நிலையை விளக்குகின்றது. நாம் தூங்குகின்ற தூக்கத்திற்கும் யோக நித்திரைக்கும் வித்தியாசம் உண்டு. நாம் தூங்குகின்ற தூக்கத்தில் சிந்தனை எதுவும் இல்லை. உலகமே இல்லை. தூங்காமல் தூங்குகின்ற தூக்கம் அல்லது அறிதுயில் நம்மை முற்றும் உணர்ந்த நிலையாகும். சுஷுப்தியில் இருக்கும் ஆனந்த நிலை நனவு நிலையில் வந்து விட்டால் நாம் முக்தர்களாகின்றோம். உணவு எடுத்துக்கொள்கிற நாம் உணவு போதும் என்ற நிலையை உணர்கின்றோம். உணவு போதுமா என்று நாம் வேறொருவரிடம் கேட்பதில்லை. அது போன்று ஆனந்தத்தை நனவில் அனுபவிக்கும் பொழுது பேரானந்தம் எது என்று உணர்கின்ற நிலை நமக்கே வருகின்றது. சமாதியில் உண்டாகும் பேரானந்தம் எத்தகையது என்பதை நாமே உணர்கின்றோம். அந்நிலையை நாம் அடைவதற்குப் புறஉலக நாட்டத்தை எல்லாம் ஒதுக்கி வைத்து விடவேண்டும். மனதை உள்முகமாகத் திருப்பி ஒருநிலைப்படுத்த வேண்டும். நாம் சரீரம் நிலைத்திருக்க வேண்டுமென்று படாதபாடுபட்டு வருகின்றோம். அதில் தோல்விதான் அடைகிறோம். பல பிறவிகளில் சரீரம் நிலைத்திருக்கப் பாடுபட்டுத் தோல்வி அடைந்திருக்கின்றோம். பலமுறை தோல்வி அடைந்தும் சரீரப்பற்று இன்னும் நீங்கவில்லை. புறப்பொருளைப் பெற்று அவற்றை இழந்து கொண்டே வந்திருக்கின்றோம். ஆனால் அப்பொருளின்மீது உள்ள பற்று நீங்காமல் இருக்கின்றது. புறப்பொருள் ஒன்றின் மீது உள்ள பற்று மற்றொன்றின் மீது மாறி அமைந்து கொண்டே இருக்கின்றது ஒருவன் தாய், தந்தையின் மீது பற்று மிக வைத்திருக்கின்றான். மணமானதும் மனைவிமீது அப்பற்று மாற்றியமைக்கப்படுகின்றது. பிறகு குழந்தைகள் மீதுபற்றுச் செலுத்தப் படும்பொழுது மனைவி, பெற்றோர்களின் மீது பற்றுச் சிறிது குறைகிறது. இங்ஙனம் புறப்பொருள்ஒன்றின் மீது உள்ளபற்று மற்றொரு பொருளின்மீது மாறி அமைவது பற்றுக் குறைந்ததற்கு அறிகுறியாகாது. உலகத்தின் மீதுள்ள பற்று தெய்வத்தின் மீது உள்ள பற்றாக மாறி அமையவேண்டும். தெய்வப்பற்று அதிகரிக்க அதிகரிக்கத்தான் உலகப்பற்றுக் குறையும். உலகப்பற்றுக் குறைய வேண்டும் என்று விரும்புகின்றவர்கள் தெய்வப்பற்றை வளர்க்க வேண்டும். ஜபம், தியானம், ஸத்சங்கம், சாஸ்திர ஆராய்ச்சி ஆகியவற்றை முறையாக இடைவிடாது செய்துவந்தால் தெய்வப் பற்று உண்டாகும். (தொடரும்)

# துளசிதாசர் சரிதம்

(296ஆம் பக்கத் தொடர்ச்சி)

மமதாதேவியின் அறவுரையைக் கேட்ட துளசிதாசர் சற்றுச் சிந்திக்கலானார். அவரிடத்திலிருந்த காம இயல்பின் வேகம் தணியலாயிற்று. காமத்தால் உந்தப்பட்டிருந்த அவர் சற்று அறிவுக்கு இடம் தரலானார். அவர் அறிவுக்கு இடம் தரவே அவருடைய காம இயல்பு அடங்கலாயிற்று. அவருடைய அறிவு அவரைச் சிந்திக்குமாறு தூண்டவே அவர் சிந்திக்கலானார். "நான் இதுவரையிலும் என்னுடைய காம இயல்புக்கு இடம் தந்து மந்த புத்தியுடையவனாக நடந்துகொண்டேன். பிறர் ஏசுதலுக்கும் பேசுதலுக்கும் இடம் கொடுத்தேன். தந்தையின் வாக்கை மீறினேன். தாய்க்கு அளவில்லாத துன்பத்தைக் கொடுத்தேன். நாணத்தையும் மானத்தையும் விட்டவனாக நடந்து கொண்டேன். அபகீர்த்திக்கு ஆளானேன். அழியும் உடல் இன்பத்தில் ஆசை வைத்து அபகீர்த்தியையும், தொல்லையையும் நானே உண்டுபண்ணிக் கொண்டேன். இப்பொழுது எனக்கு அறிவு வந்தது. ஸ்ரீமந் நாராயணனை நினைப்பதும் அவர்மீது பற்றுக் கொள்வதும்தான் சகல நன்மைகளையும் தரும். ஸ்திரீ போகங்களை மறந்து மனமே, ஸ்ரீமந் நாராயணனை உறுதியாகப் பற்றிப் பிடித்துக் கொள்." இங்ஙனம் சிந்தித்துப் பாரமார்த்திக வாழ்வே தாம் பின்பற்ற வேண்டியதாகும் என்ற தெளிவு பெற்றார். அறிவு புகட்டியபடி அவருடைய மனமும் செல்ல இசைந்தது. மமதாதேவியைக் குருவாக நினைந்து மமதா தேவிக்கு வணக்கம் செலுத்தினர். மமதா தேவியைப் பார்த்து "தாயே, இன்றுடன் உங்களுக்கும் எனக்கும் இருந்த உடல் உறவு அறுந்து போய்விட்டது. காம விகாரம் மிகவும் கொடியது என்பதை நான் உணர்ந்தேன். நான் செய்த அபசாரத்துக்கு நீங்கள் செய்த உபகாரத்தை நான் என்றும் மறக்கமாட்டேன். தாங்கள் இனி தாய் வீடு சென்று பகவானைப் பற்றிப் பிடித்துக் கொள்ளுங்கள். நானும் பகவானைப் பற்றிப் பிடித்துக் கொள்கின்றேன்." இங்ஙனம் மமதாதேவிக்கு அறிவுரை பகர்ந்து விட்டுப் பகவத் பக்தி ஓங்கியவராய் யார் தடுத்தும் நிற்காமல் பகவான் தரிசனத்தின் பொருட்டு மன உறுதி படைத்தவராய் வீட்டைத் துறந்து காட்டுக்குச் சென்று விட்டார். முன்பு காமத்தால் பீடிக்கப்பட்டுக் காம ஆசையை நிறைவேற்றிக் கொள்ள எப்படி அலைந்தாரோ அப்படி இப்பொழுது பக்தி மேலிட்டுப் பகவான் தரிசனத்துக்காக அவருடைய நெஞ்சம் உருகிக் கொண்டிருந்தது. காட்டில் பல இடங்களிலும் சஞ்சரித்த பிறகு இறுதியாகக் காசியை அடைந்து தெய்வப் பித்துப் பிடித்தவராக ஹரி ஹரி என்று தெருவெல்லாம் அலைந்து கொண்டிருந்தார்.

மகன் காசியில் அலைந்துகொண்டிருப்பதை அறிந்த தாய் காசிக்குச் சென்று மகனைக் கண்டு தாரை தாரையாகக் கண்ணீர் சிந்திக் கொண்டு மகனின் பாதங்களில் வீழ்ந்தாள். "அப்பா, மகனே, தவத்தில் சிறந்த சீலனே, வைராக்கியம் படைத்தவனே, உன் தந்தை என்னைப் பிரிந்து கானகம் போய்விட்டார். நீயும் என்னைப்பிரிந்துவிட்டால் நான் எவ்வாறு உயிர்வாழ்வேன் ?" என்று கூறிப் புலம்பினள். துளசிதாசர் தாயைப் பணிந்து "தாயே, நீங்கள் நாராயணனைப் பார்த்தீர்களா? உங்களுடைய கண்கள் அவர் பாதங்களில் போய்ச் சேர்ந்தனவா? இழிவான எண்ணங்களெல்லாம் உங்கள் உள்ளத்தை விட்டுப் போய் விட்டனவா? நான் இன்னும் அந்த நாராயணனைக் காணவில்லை. இக்கொடியவன் மீது அவர் இன்னும் அருள் சுரக்காது இருக்கின்றார். அக்கமலக் கண்ணனைக் கண்டு ஆனந்தம் அடைவேன். அவர் வந்து எனக்குத் தரிசனம் தருவார். அப்பொழுது என்னுடைய குறைகள் எல்லாம் தீரும்" என்று கூறி ஹரிமீது கீர்த்தனங்கள்பாடினர். துளசிதாசருடையகால்களைப் பிடித்துக்கொண்டு "சுவாமி, நான் செய்த குற்றத்தை மன்னித்து விடுங்கள். நீங்கள் வீட்டுக்குத் திரும்பிவந்து உங்கள் தாயைக் காப்பாற்றுங்கள். என்னை மேலும் நீங்கள்சோதிக்க வேண்டாம்" என்று புலம்பினள்மமதாதேவி. துளசிதாசர் மமதா தேவியைப் பார்த்து, "தேவீ, உம்மை நான் சோதிக்கவில்லை.

ஹரியானவர் எனக்கும் இன்னும் தரிசனம் தரவில்லை. விபீஷணனைக் காத்தவரும், இராவணனை மாய்த்தவரும், அயோத்தியை ஆண்டவருமாகிய ரகுராமர் காட்சியைப் பெறாது நான் விடு திரும்பேன். நீங்களும் தாயின் வீட்டுக்குச் சென்று சுகமாய் இருங்கள்'' என்று கூறிவிட்டு "ஸ்ரீ ராமா, பரந்தாமா, துளசி மார்பா, திரிவிக்கிரமா, புருஷோத்தமா" என்று ஸ்தோத்திரம் செய்துகொண்டு ஆடத் தொடங்கினர். இவருடைய நிலையைப் பார்த்த மமதாதேவி மாமியாரை நோக்கிப் பகர்ந்ததாவது: ''இனி இவரை நாம் அழைத்துக்கொண்டு போவது அருமை. இக் காசியம்பதியில் ஒரு மடம் ஏற்படுத்தி அதில் தங்கி நாள்தோறும் இவரைத் தரிசித்துக் கொண்டிருக்கலாம்.'' மமதாதேவியின் மாமியார் பகர்ந்ததாவது: "அம்மா, மமதாதேவி, உன் விருப்பப்படி இங்கு மடம் ஏற்படுத்தித் துளசிதாசருக்குப் பணிவிடை செய்துகொண்டு நீ இங்கேயே இரு. நான் உன் மாமனரிடம் சென்று அவரை இங்கு அழைத்துக் கொண்டு வருகின்றேன். அவர் ஒருவேளை வர மறுத்தால் அவருடன் வாழ்ந்திருந்து அவருடன் உயிர்விடுவேன்'' என்று கூறிக் காசி விசுவநாதரைத் தொழுது கணவன் இருக்குமிடமாகிய நைமிசாரண்யம் நோக்கிப் புறப்பட்டாள்.

ஆங்கு ஆத்ம நிஷ்டையில் மூழ்கியிருந்த ஆத்மாராமைப் பார்த்து அவர் பாதங்களில் விழ்ந்து பிரலாபிக்கத் தொடங்கினள். ஆத்மாராம் கண்களைத் திறந்தபொழுது துளசிதாசருடைய தாய் தம் முன் புலம்பிக்கொண்டிருந்ததைப் பார்த்தார். துளசிதாசருடைய வைராக்கியத்தையும், அவர் பகவத் பித்தேறிக் காசியில் இருப்பதையும் ஆத்மாராமுவுக்குத் தெரிவித்தாள். அதைக் கேட்டு ஆத்மாராம் பரமானந்தம் அடைந்தார். துளசிதாசருடைய பக்தி நிலையைப் பார்த்து மகிழ்ச்சி அடையக் காசிக்கு உடனே புறப்பட்டார். காசியில் துளசிதாசரைப் பார்த்து ஆனந்தம் அடைந்தார். ''துளசிதாசா, என் அருட் புதல்வா, ஹரிபக்தியில் உருகுகின்ற பக்த சிகாமணியே, நீ விரைவில் நாராயணனைத் தரிசிப்பாய். நீ பரிபூரணஞானியாவாய். என் எண்ணத்தைப் பகவான் பூர்த்தி பண்ணிவிட்டார். இனி உடலை விடுவதில் எனக்கு ஆனந்தமே'' என்று கூறிக்கொண்டு துளசிதாசரைத் தழுவியவராக உடலை விட்டுப் பிரிந்து இறைவனடி சேர்ந்துவிட்டார்.

தந்தையின் மரணம் தனயன் உள்ளத்தைச் சிறிது கலக்கியது. தாய் கணவன் பிரிவினல் துயரத்தை அடைந்து மகனை ஆசீர்வதித்து விட்டுக் கங்கையில் குதித்து மறைந்தாள். பெற்றோர்களுக்குச் செய்யவேண்டிய ஈமக்கடன்களைச் செய்துவிட்டுத் தவத்தில் ஈடுபடலானர். காசியிலிருந்த பக்தர் ஒருவர் துளசிதாசரைத் தம் வீட்டுக்கு அழைத்துச் சென்று அவருக்குச் சம்ரக்ஷணைசெய்து வந்தார். மமதாதேவி காசியில் வந்து மடம் ஒன்றை ஏற்படுத்திச் சாதுக்களுக்குச் சேவை செய்து வந்தாள். துளசிதாசரைத் தினமும் தரிசனம் செய்து வந்தாள்.

பகவான் பக்தர்களுக்கு வசப்படுகின்ருர். ஸ்ரீமந் நாராயணன் தரிசனத்தைப் பக்தன் அனுமான் மூலம் பெற நினைத்து அனுமாரைத் துதி செய்தார் துளசிதாசர். அனுமார் துளசிதாசருடைய தீவிரமான பக்தியைப் பாராட்டித் துளசிதாசருக்குத் தரிசனம் தந்தார். துளசிதாசர், ''நாராயண தரிசனம் கிடைப்பதற்குத் தாங்கள் அருள்புரியவேண்டும்" என்று அனுமாரைக் கேட்டுக்கொண்டார். அனுமார் ''நீவிர் இருக்கும் தெருவில் ஸ்ரீமந் நாராயணன் வந்து உமக்குக் காட்சி கொடுப்பார்'' என்று அருளிவிட்டு மறைந்துவிட்டார். அனுமார் ஸ்ரீமந் நாராயணனிடம் சென்று, ''பரத லக்ஷ்மண சத்ருக்கன சீதை சமேதராகத் தாங்கள் துளசிதாசருக்குக் காட்சி தரவேண்டும்'' என்று ஸ்ரீமந் நாராயணனை ஸ்தோத்திரம் செய்தார். ஸ்ரீமந் நாராயணனும் துளசிதாசருக்குக் காட்சி கொடுக்கச் சம்மதித்தார்.

ஸ்ரீமந் நாராயணன் ஸ்ரீ ராம ரூபத்தை மறைத்து நீண்ட அங்கியும், நீண்ட தாடியும் அணிந்து துலுக்க வடிவத்தில் துளசி தாசருக்குக் காட்சி கொடுத்தார். தம் முன் நிற்பவர் துலுக்கரெனத் தீர்மானித்துத் துளசிதாசர் பகவானிடம் பாராமுகமாக இருந்தார். அனுமாருடைய வாக்கை நிறைவேற்றிய பின் ஸ்ரீமந் நாராயணன் துளசிதாசருடைய காட்சியிலிருந்து மறைந்தார். துளசிதாசர் ஸ்ரீமந் நாராயணன் காட்சி கிடைக்கும் என்று எதிர்பார்த்திருந்து ஏமாற்றம் அடைந்தார். மீண்டும்

அவர் அனுமாரைத் துதிசெய்தார். அனுமார் அவர் முன் தோன்றினர். "தாங்கள் கூறிய பிரகாரம் பகவான் எனக்குக் காட்சி கொடுக்க வில்லை" என்றார். அதற்கு அனுமார் பகர்ந்ததாவது: "பகவான் அசுவத்தின் மீதிருந்து துலுக்கர் வடிவில் உமக்குக் காட்சி கொடுத்தார். அவரை ஏன் நீ அறிந்துகொள்ளாமல் போனய்? பகவான் எந்த வடிவத்தில் வேண்டுமென்றாலும் வருவார். தூயபக்தி உண்டாகும் பொழுதுதான் அவரைக் காணமுடியும். இன்னும் நீ பகவானிடம் பக்தி பூண்டு மனதைத் தூயதாக்கு. மனம் பூரணத் தூய்மை அடைகிறபொழுது அவர் உமக்குக் காட்சி தருவார்" என்று கூறி அனுமார் மறைந்தார்.

துளசிதாசர் தீவிரமான பக்தியில் ஈடுபட்டார். அவருடைய பக்தி ஆழ்ந்து போகப் போக அனுமார் அவருடைய பக்தியைப் பாராட்டும் விதத்தில் ஸ்ரீமந் நாராயணனிடம் பகர்ந்ததாவது: "சுவாமி, தாங்கள் துளசிதாசருக்குத் தரிசனம் தந்தே ஆகவேண்டும். அவருக்கு ஏன் நீங்கள் தரிசனம் கொடுக்கத் தாமதம் செய்கின்றீர்கள்? நீங்கள் தாமதம் செய்வீர்களானல் தாங்கள் இருக்கும் வைகுந்தத்தையே அடியோடு பெயர்த்து எடுத்துக் கொண்டுபோய்க் காசியில் துளசிதாசர் முன் வைத்துவிடுவேன்" என்றார். அதைக் கேட்ட லக்ஷ்மி பிராட்டியார் பகவானை நோக்கிப் பகர்ந்ததாவது: "சுவாமி, வைகுந்தத்தைக்காட்டிலும் பத்து மடங்குபெரிதான சஞ்சீவிமலையை ஒரு கரத்தில் பந்தைப்போல் தூக்கி வந்த அனுமாருக்கு இந்த வைகுந்தத்தைத் தூக்கிச் செல்வதில் சிரமம் ஏதும் இருக்காது." ஸ்ரீமந் நாராயணன், "அனுமாரே! துளசிதாசர் உள்ளம் வேண்டிய பக்குவநிலையை அடைந்துவிட்டது. இனி நான் அவருக்குக் காட்சி கொடுப்பேன்" என்றார். கருட வாகனத்தின் மீது எழுந்தருளிப் பரத லக்ஷ்மண சத்ருக்கன சீதா சமேதராய் நாரதர் முதலான முனிவர்கள் புடைசூழ அனுமார் முன்னே நடக்கத் துளசிதாசர் இருக்கும் காசிக்குப் பரந்தாமன் புறப்பட்டார். தேவர்கள் இக்காட்சியைப் பார்த்துப் பகவானைத் துதி செய்தார்கள். துளசிதாசர் பகவானுடைய வைபவக் காட்சியைப் பார்த்து மெய்சிலிர்ப்பும் புளகாங்கிதமும் அடைந்தார். "நான் செய்த புண்ணியத்தால் தேவர்கள் புடை சூழப் பகவான் வருகின்றார். அனுமாரும் அவருக்கு முன்வந்துகொண்டு இருக்கிறார். பகவான் சீதா சமேதராக பரதசத்ருக்கன லக்ஷ்மணருடன் வரும் காட்சிதான் என்னே!" என்று கூறிய வண்ணம் அவர் தம்மை மறந்து கீழே விழுந்து விழுந்து வணக்கம் செலுத்தினர். துளசிதாசர் பகவானைப் பக்தி மேலீட்டினல் பலவாருக ஸ்தோத்திரம் செய்தார். துளசிதாசர் ஸ்ரீமந் நாராயணனை வலம் வந்து பணிந்து, "சுவாமீ, தங்களை மறந்து காமவலையில் சிக்கி விஷயானந்தத்தில் மயங்கி உம் நாம பஜனையைத் துறந்து துன்பப்பட்டதற்குக் காரணம்என்ன?" என்று கேட்க, பகவான், "மாயையில் சிக்கியவர்கள்காமத்துக்கு வசப்படுகிறார்கள். பக்கத்திலிருக்கும் நாரதர் ஒரு சமயம் மாயைக்கு வசப்பட்டு இருந்ததை நீ அறியாயா? ஆகையால் பழையதை மறந்து பகவத் சிந்தனையில் மூழ்கி இருப்பாயாக" என்றார். துளசிதாசர் "பக்தர்களை ரக்ஷிப்பவர் நீரே, உம்மை நம்பின அடியார்களுக்குத் துன்பம் வராமல் காப்பாற்றுபவரும் நீரே. நான் என்னும் அகந்தையைப் போக்கிய பிரம்ம ஞானிகளுக்கு அகண்டானந்தத்தைத் தருபவரும் நீரே" என்று பகவானை ஸ்துதித்து நின்றார் துளசிதாசர். "நீர் அனுமாரிடம் பிரம்மோபதேசம் பெற்று இந்தி மொழியில் என் திருவிளையாடலாகிய ஸ்ரீ ராமாயணத்தைப் பாடி அதற்குத் துளசி ராமாயணம் என்று பெயரிடுவாயாக. அது அநேகரால் பாராயணம் செய்யப்பட்டு வருவதாகுக. உள்ளத்தில் உண்மையும் உறுதியும் தெய்வ பக்தியும் ஏற்பட்டால் மேலான உண்மைகள் தெற்றென உள்ளத்தில் விளங்கும். பிறகு அவ்வுண்மைப் பிரகாரம் வாழ்க்கை வாழ்ந்து வருவோமானல் அது உலகுக்குப் பயன்படும். நீ உன்னைத் தூய்மையாக்கிக் கொண்டாய். என் அருள் உனக்கு உண்டு. பக்தியைப் பரப்பும் செயலில் நீ ஈடுபட்டு அதைப் பூர்த்தி செய்தபின் என் திருவடி வந்து சேர்வாய். எங்களுடைய அருளோடு உன் தூய்மையும் முயற்சியும் சேர்ந்து இராமாயணம் என்னும் காவியம் தோன்றுவது ஆகுக" என்று துளசிதாசருக்கு அருள்புரிந்து ஸ்ரீமந் நாராயணன் மறைந்தார்.

(தொடரும்)

# வலிமை

( சகோதரி நிவேதிதை )

துறவு என்பது எப்போதுமே, பெரியதை அடைவதற்காகச் சிறியதை விடுவதாகும். சிறியதைப் பிடித்து வைத்துக்கொள்வதற்காகப் பெரியதை விட்டுவிடுவதன்று. கடினமானதைப் பற்றிக்கொண்டு இலகுவானதை விட்டு விடுவது துறவு. ஆழமானதை அடைவதற்கு மேலோட்டமானதை விடுவது துறவு. துறவு புதுப்புதுக் கடமைகளை அளிக்கிறது—சுகத்தை அன்று.

ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருமையான நல்ல பாம்புக் கதை தனி மனிதன் ஒருவனின் மரியாதை என்றால் என்ன, வலிமை என்றால் என்ன என்பதை அழகாக ஒரு வரியில் சொல்லிவிடுகிறது. "சீறு; ஆனால் தீண்டி விடாதே". வாழ்க்கையில் எத்தனை சூழ்நிலைகளைப் புரிந்துகொள்ள இது திறவுகோலாக இருக்கிறது! எத்தனை மக்களோடு நல்ல உறவு நீடித்திருக்க இது உதவுகிறது; அளவுக்கு அதிகமாகச் சீண்டினால் கண நேரத்தில் இனிய சுபாவம் எல்லாம் மறைந்துவிடும். பயமுறுத்தும் பாங்கிலே சீறிக்கொண்டு வருவோம் என்று தெரிவதனாலேயே எத்துணை பேர் நம்மோடு ஒழுங்காகப் பழகி வருகிறார்கள்! பாம்பு எந்நேரமும் படம் எடுக்கும் என்று அவர்களுக்குத் தெரியும்.

ஆனால் பொறுமை இன்மையாலும், எரிச்சலுறுவதாலும் செய்யும் ஒவ்வொரு செயலையும் "சீறுவது" என்று எண்ணிவிடுவது தவறு; அத்தகைய தவறை நாம் செய்யக்கூடாது. பரமஹம்சர் கதையில் வரும் இந்த நல்லபாம்பினிடத்துக் கோபம்கூட முறையாக வளர்க்கப்பட்ட சக்தியாகக் காணப்படுகிறது. தாக்குதல் செய்வதிலே மிகப் பயங்கரமான ஆயுதமாகிய இந்தக் கோபத்தைப் பயன்படுத்துவதிலே ஒரு பயிற்சி, அந்தப் பயிற்சியின் விளைவாக வந்த சக்தி, சூழ்நிலையின் தேவையைக் கணப்பொழுதில் உணர்ந்துகொள்ளும் சாமர்த்தியம், இவை எல்லாவற்றிற்கும் மேலாக, இவை ஒவ்வொன்றையும் அறிந்தே நன்கு இழுத்துப் பிடித்திருக்கும் கட்டுப்பாடு—இந்தச்சக்திகள் எல்லாம்சேர்ந்துதான், கட்டுப்பாட்டுக்குள் இருக்கும் இந்தச் சக்திதான், அந்தச் சர்ப்பத்தை அவ்வளவுபயங்கரமானமூர்த்தி ஆக்குகிறது. சக்தியற்ற மூடர்களும், கோழைகளும் சிறுபிள்ளைத்தனம் வாய்ந்தவரும் "சீறு"வதைப் பற்றிப் பேசுவதில் பயனில்லை. தன் குருநாதர் சொன்னபடி நடப்பதென்றால், தீண்டாவிட்டாலும் சீற வேண்டும் என்று நம் கதாநாயகன் (பாம்பு) முடிவெடுத்திருக்க வேண்டும். இதன் விளைவாகப் பல்லாண்டுகளாக நல்லபாம்பாக ஆவதையே தன் ஒரே கடமையாகக் கொண்டிருக்க வேண்டும். அப்படி வலிமையைச் சேர்த்தான பிறகு சேர்த்த அந்தச் சக்தியைக் கட்டுக்குள்வைத்திருப்பதில் உண்மையான வலிமையைக் காண்பித்தது அந்தப் பாம்பு. நம் ஒவ்வொருவருடைய கடமையும் இப்படிப்பட்ட நல்லபாம்பு ஆவதே ஆகும். நாம் உலகுக்கு அளிக்கும் நற்செய்தி வலிமை அற்றோரின் செய்தி அன்று. நம்முன்னே எந்தத் தவறும் நிகழ முடியாது என்ற நிலை ஏற்படும் வகையில் நாம் வாழவேண்டும். சில சமயங்களில், 'பாம்பின்' முழுவலியும் உணரப்படாத போது 'தீண்டுதல்' கூடத் தேவையாய் இருக்கலாம். ஆனால் அப்படிப்பட்ட சமயங்களில் நம்மால் வழங்கப்படும் தண்டனையும் எப்போதுமே ஓர் எச்சரிக்கையாக இருக்கவேண்டுமே ஒழிய ஒருக்காலும் பழி வாங்குவதற்காக அளிக்கப்பட்டதாக இருக்கக்கூடாது. நம்முடைய உண்மையான வலிமையோடு சீர்தூக்கும்போது வழங்கப்பட்ட தண்டனையும் 'சீறு'வதாகவே இருக்க வேண்டும்.

இந்த உண்மைகளை எல்லாம், தவறு செய்துவிட்ட ஒரு குழந்தையை எப்படித் தண்டிக்கிறோம் என்பதிலிருந்து தெரிந்துகொள்ளலாம். தன் மகனைத் திருத்துவதாக நினைத்துக்கொண்டு முழுமூச்சோடு அவனைத் தண்டிக்கும் ஒரு தந்தையிடம் நாம் என்ன மதிப்புக் கொள்ள முடியும்? குழந்தைக்குத் தண்டனை வழங்குவதில் தம்மை மறந்து ஈடுபட்டுவிடாமல் சற்றே விலகியிருந்து செய்ய வேண்டும்.

நாம் வழங்கும் தண்டனை பயனுள்ளதாய்

இருக்க வேண்டுமென்ருல் நம் செயலுக்கு நாமே சாக்ஷியாய் இருந்துகொண்டு செய்ய வேண்டும். நம்மை மறந்து கோபத்துக்கு வசப்பட்டு ஒரு குழந்தையைத் தண்டித்தால் தவறு செய்த அக்குழந்தைக்கு நம்மீது ஏளனம் தான் வருமேயன்றி மதிப்பு ஏற்படாது. தண்டிக்க வேண்டியிருக்கிறதே என்ற வருத்தத்தோடு, ஆனல் செய்த தவறுக்கு இத்தகைய நடவடிக்கை எடுத்தாக வேண்டும் என்ற நோக்கோடு, தண்டனை கொடுக்கப்பட வேண்டும். மீறப்பட்ட நியதியைக் கருத்தில்கொண்டு, அந்த நியதி மீறப்பட்டதற்காக மட்டும் தண்டிக்க வேண்டும். இப்படிப்பட்ட மனநிலையில் வழங்கப்பட்ட தண்டனை துன்பத்தைத் தரும்போதே மனமாற்றத்தையும் உண்டாக்கும்.

தன் வல்லமையைப் பயன்படுத்துவதை முடிவாக நினைக்காமல் அதற்கு அப்பாற்பட்ட பெரிய இலட்சியத்தை உடைய மனிதனே தன் வல்லமையை நன்கு பயன்படுத்துகிருன். நம்மிடம் உள்ள பலம் தேவையறிந்து, உரிய முறையில், பயன்படுத்தப் படத்தான் உள்ளதே ஒழிய, அதன்போக்கில் நம்மை அடித்துச் செல்ல அன்று. திறமைமிகுந்த சாரதியால் கடிவாளங்களைக் கொண்டு நன்கு பிடித்து வைக்கப்பட்ட குதிரைகள் போன்று நம்முடைய சக்தி இருக்க வேண்டும். கட்டுப்பாட்டுக்குள் வைத்திருப்பதே வலிமையை நன்கு வெளிப்படுத்துவது ஆகும். ஆனல், கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்க முதலில் நம்மிடத்து வலிமை இருக்க வேண்டும். தைரியம் இல்லாத ஒரு மனிதனை யாரும் மதிப்பதில்லை. அவ்வாறே கண்மூடித்தனமாகக் கோபாவேசத்தில் தன் வயமிழந்தவனைச் செயல்படுபவனும் மதிப்புப் பெறுவதில்லை. நம்முடைய மதம் வலிமையைப் போதிக்கும் மதம். வலிவு படைத்திருத்தலே மனிதனின் முதல் கடமை ஆகிறது என்பது நம் கருத்து. அப்படிச் சேர்த்த வலிமையைக் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்க வேண்டும். கட்டுக்குள் அடங்கிய வலிமை நம்மிடத்து இருக்கிறது என்பதைப் பிறர் அறியுமிடத்து நம்முன்னே யாரும் தவறு செய்ய மாட்டார்கள். தர்மத்துக்கு உட்பட்ட செயல்களையே செய்வார்கள். பலவீனர்கள் காக்கப்படுவார்கள். அப்படிப்பட்ட வாழ்க்கை வாழ்வது என்பது ஒரு சாதாரண சாதனை அன்று. அத்தகைய சாதனையை நிகழ்த்துவதே நம் குறிக்கோளாகும்.

---

## ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய முதல் தெய்விக அனுபவம்

கதாதரன் என்பது பெற்ரோர்கள் ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கு இட்ட பெயராகும். கதாதரன் சிறுவனுக இருந்தபொழுது ஒருதடவை கிராமப் பகுதியிலுள்ள வயல் வெளிக்கு உலாவச் சென்ருன். கண்ணைக் கவரும் பசுமையான காட்சி எங்குத் திரும்பிப் பார்த்தாலும் அமைந்திருந்தது. அக்காட்சியைக் கண்டு ரசித்தவண்ணம் அடிமேல் அடிவைத்துக் கதாதரன் நடந்துகொண்டிருந்தான். தலைநிமிர்ந்து ஆகாயத்தைப் பார்த்தபொழுது கருமை நிறம் வாய்ந்த மேகக்கூட்டங்கள் மனதைக் கவரும் வண்ணமாக அசைந்துகொண்டிருந்தன. அம்மேகக்கூட்டங்களின் கீழ் வெண்மை நிறம் வாய்ந்த கொக்குக் கூட்டங்கள் பறந்து சென்றன. இத்தகைய பசுமை, வெண்மை, கருமை நிறங்களோடு கூடிய காட்சிகளை ஏககாலத்தில் பார்த்தபொழுது அவனுடைய இளம் உள்ளத்தில் பேரின்ப உணர்ச்சி தூண்டிவிடப்பட்டது. பரவசநிலை அடைந்த தெய்விகப் பாலகன் தன்னையும் சுற்றுப்புறத்தையும் முற்றிலும் மறந்து ஆனந்தத்தில் மூழ்கியவனுகக் கீழே விழுந்துவிட்டான். தரையில் வீழ்ந்த கதாதரனைக் கண்ட அவன் நண்பர்கள் பயமும் பதற்றமும் அடைந்தார்கள். தாய் தந்தையருக்கு விஷயத்தைத் தெரிவிக்கக் கதாதரனை வீட்டுக்குத் தூக்கிச் சென்ருர்கள். சிறிது நேரத்துக்குப் பின் உலக நினைவு பெற்றுப் பழைய நிலையை அடைந்தான்.

எதிர்பாராது ஏற்பட்ட இந்த நிகழ்ச்சி கதாதரனது தாய் தந்தையர்களான க்ஷுதிராம் சட்டர்ஜிக்கும், சந்திரமணி தேவிக்கும் மனவருத்தத்தை ஏற்படுத்தியது. கதாதரன் அடைந்த பேரின்ப நிலையைக் கதாதரன் மட்டுமே உணர்ந்தான். ஸ்ரீ ராமகிருஷ்ணரின் முதல் தெய்விக அனுபவம் அது ஆகும். அவர் பெற்றிருந்த பெருநிலைக்கு அது சிறந்த சான்ருகிறது.

---

# ஆத்ம போதம்

( திரு. V. S. நரசிம்மன் )

'எங்கும் உள்ள சச்சிதானந்தப் பிரம்மத்தை ஞானக் கண்ணுடையவன் நன்கு பார்க்கின்ருன்; ஆயினும் அக்ஞானியோ, ஒளி வீசும் கதிரவனைக் குருடன் காண இயலாதது போல் பிரம்மத்தைக் காண்பது கிடையாது.'

சாதாரண உலக அறிவைப் புலன்கள் மூலம் பெறலாம். ஆயினும் பிரம்ம ஞானம் 'அபரோக்ஷம்' எனப்படும். ஊனக்கண்ணல் உணர இயலாததை ஞானக் கண்ணல்தான் காண வேண்டும். 48வது சுலோகத்தில் 'ஈக்ஷதே ஞான சக்ஷுஷா' என்று இதே தத்துவம் குறிப்பிடப்பட்டுள்ளது.

கண்களை மட்டும் குறிப்பிட்டாலும், புலன்களால் பரம்பொருள் அறியப்பட முடியாத ஒன்று என்று நாம் கொள்ளவேண்டும். "ந சக்ஷுஷா க்ருஹ்யதே நஅபி வாசா, ந அந்யை: தேவை:—கண்ணல் அது கிரகிக்கப்படுவதில்லை. வாக்காலும் மற்றப் புலன்களாலும் உணரப்படுவதில்லை." [முண்டக உபநிடதம், III-1-8] தேவா: என்ற பதம் புலன்களையும் குறிக்கும்.

श्रवणादिभिरुद्दीप्त ज्ञानाग्नि परितापितः ।
जीवः सर्व मलान्मुक्तः स्वर्णवद्द्योतते स्वयम् ॥

श्रवणादिभिः (ச்ரவணுதிபி:) கேட்டல் முதலியவற்ருல் उद्दीप्त (உத்தீப்த) கொழுந்து விட்டு எரியும் ज्ञान अग्नि (ஞான அக்னி) ஞானம் என்னும் நெருப்பில் परितापितः (பரிதாபித:) பல முறை நன்கு எரிக்கப்பட்டு जीवः (ஜீவ:) ஜீவன் सर्वमलान् मुक्तः (ஸர்வமலான் முக்த:) எல்லா மாசுகளும் அகற்றப்பட்டு स्वर्णवत् (ஸ்வர்ணவத்) தங்கம் போல் स्वयम् (ஸ்வயம்) தானே द्योतते (த்யோததே) பிரகாசிக்கிருன்.

"ஜீவன் கேட்டல் முதலியவற்ருல் கொழுந்து விட்டெரியும் ஞான அக்னியில் எல்லா மாசுகளும் எரிக்கப்பட்டவனுக, புடம் போட்ட தங்கம் போல் பிரகாசிக்கின்ருன்."

தங்கம் பல அழுக்குகளுடன் சேர்ந்து இருக்கும்போது அதன் மதிப்பு எவருக்கும் தெரியாது. அதைச் சுத்தப்படுத்தி நெருப்பில் காய்ச்சிப் புடம் போட்டால் பளிச்சென்று திகழ்கின்றது. அதனுடைய இயல்பான பிரகாசத்தை மறைத்து வந்த அழுக்கு நீங்கவேண்டும் என்பதே அவசியம். அதுபோன்று இயல்பாகவே உள்ள ஆத்ம சைதன்யம் பிரகாசம் அடைய மலங்கள் அனைத்தும் போக வேண்டும். அதை நீக்க நல்ல குருவை நாடிச் சென்று நல்லுபதேசம் பெற்று அந்தர்முகமாகத் தியானிக்க வேண்டும். கேட்டல், சிந்தித்தல், தெளிதல் என்ற விசார முறையை அனைவரும் அறிவர். 'ஆத்மா வா அரே த்ருஷ்டவ்ய: ச்ரோதவ்யோ, மந்தவ்யோ நிதித்யாஸிதவ்யோ—என்னுடைய அன்பிற்கு உரியவளே, இந்த ஆத்மன் பார்க்கப்பட வேண்டும்; ச்ரவணம், மனனம், நிதித்யாஸனம் செய்யப்படவேண்டும்' என்று மஹரிஷி யாக்ஞவல்கியர் தனது மனைவிக்கு உபதேசம் செய்கின்ருர்.

हृदाकाशोदितो ह्यात्मा बोधभानुस्तमोऽपहृत् ।
सर्वव्यापी सर्वधारी भाति भासयतेऽखिलम् ॥

हृदाकाशे उदितः (ஹ்ருதாகாசே உதித:) இதயக் கமலத்தில் எழுந்த आत्मा (ஆத்மா) ஆத்மா बोधभानुः (போதபானு:) அறிவு மயமாகிய கதிரவன் तमः (தம:) இருட்டை अपहृत (அபஹ்ருத்) போக்குவது सर्वव्यापी (ஸர்வவ்யாபீ) எங்கும் பரந்தும் सर्वधारी (ஸர்வதாரீ) அனைத்திற்கும் ஆதாரமாக भाति (பாதி) விளங்குகிறது अखिलं (அகிலம்) எல்லாவற்றையும் भासयते (பாஸயதே) விளங்கச் செய்கின்றது.

"இருதய ஆகாசத்தில் எழும் ஆத்மா ஞான சூரியனை இருட்டை அகற்றி, எங்கும் பரவி, எல்லாவற்றையும் ஆதரித்து, அவற்றைப் பிரகாசப்படுத்தித் தானும் பிரகாசிக்கின்றது."

'கதிரவன் குணதிசைச் சிகரம் வந்தடைந்தான், கன இருள் அகன்றது காலையம் பொழுதாய்' என்று பாடுகின்ருேம். தமஸ் என்பது இருட்டு; அதனை நீக்க சூரியன் எழுந்தால் போதும். அதுபோன்று அக்ஞான இருட்டை நீக்க ஆத்மபோதமாகிய பானு எழவேண்டும். அகத்தே தியானத்தில் ஆழ்ந்து நிதித்தியாசனம் செய்தால் பிறக்கும் உள்ளொளியே ஆத்ம போதம். இருதய ஆகாசத்தில் வழிபடு மூர்த்தி

ஜோதி ஸ்வரூபமாய் பிரகாசித்துக் கொண்டிருப்பதை அனுபவத்தால் உணரவேண்டும். சாதகன் வாழ்வின் இலட்சியம் இதுவே.

பல வழிகளில் மனதை நிலை நிறுத்தத் தியானம் பழகுவார்கள். நாசியின் நுனியில், புருவங்களின் இடையில், சஹஸ்ராரத்தில் சிந்தனையை நிலை நிறுத்தச் சாதனை செய்வார்கள். அனைத்திலும் சாலச் சிறந்ததும், தொந்தரவு அற்றதும் 'இதய ஆகாசத்தில் மனதை உட்குவித்தலே' என ஆன்றோர் பகர்வர். ஸ்ரீ ரமண மஹரிஷி அவர்களும் ஆத்ம நிஷ்டைக்கு இதையே உபதேசிக்கின்றார்.

இதயமாம் குகையின் நாப்பண் ஏகமாம் பிரம்மம் மாத்ரம் அது 'அஹம் அஹம்' ஆய் நேரே அவிர்ந்திடும் ஆன்மாவாக இதயமே சார்வாய்; தன்னை எண்ணி ஆழ்; அலது வாயு அதனுடன் ஆழ் மனத்தால்; ஆன்மாவில் நிட்டன் ஆவாய்.

"அங்குஷ்ட மாத்ரோ புருஷோ மத்யே ஆத்மனி திஷ்டதி; அங்குஷ்ட மாத்ர: புருஷோ அந்தராத்மா ஸதா ஜனானாம் ஹ்ருதயே ஸந்நிவிஷ்ட: (கடோபநிஷத். 2, 1, 12; 2, 3, 17) – கட்டைவிரல் அளவுள்ள புருஷன், அந்தராத்மா, என்றும் ஜீவர்களின் இதயத்தில் நிலை பெற்றுள்ளான்" என்று உபதேசிக்கின்றது. பேலூர்மடத்தில் சந்நியாசிகளும், பிரம்மச்சாரிகளும் வேதாந்தப் பாடத்தைக் கேட்டுக் கொண்டிருந்தனர். ஒருநாள் கடோபநிஷத்தின் இந்தச் சுலோகத்தைக் கூறி அதன் கருத்தை வங்காளத்தில் மொழிந்தார் பாடம் நடத்துபவர். பரமஹம்ஸரின் நேர் சீடரில் ஒருவரும், சாஸ்திர ஞானத்தைப் புத்தகங்கள்மூலம் அறியாதவரும் ஆன சுவாமி அத்புதானந்தர் (ஸ்ரீ லாடு மஹராஜ்) உடன் 'டீக் போல்சி-சரியாகச் சொல்கின்றார்' என்று கூறினர். தம்முடைய அனுபவம் உபநிடதத்திற்கு ஒத்து வருவதை அவர் உணர்த்தினர். சாதகர்கள் சித்தி பெறுவதும் இந்நிலையில்தான் என்பது புலப்படும்.

ஆத்மபோதம் அகத்தே எழுந்த பின் வேறு கர்மங்களுக்குத் தேவையே இல்லை. ஞானி ஒருவன் தனது நித்திய கர்மத்தை விடலாகாது என்று ஒரு கருத்து நிலவுகின்றது. வெறும் சடங்காக இருப்பதை அவர் தொடர்ந்து செய்யத் தேவையில்லை என்றும் கருதப்படுகின்றது. வலிய அதனைத் துறக்காது, காலப் போக்கில் வழுவி விட்டால் அதுவே சிறப்பாகும். 'நீங்கள் ஏன் நித்திய கர்மம் ஆகிய ஸந்தியா வந்தனம் செய்யவில்லை?' என்று ஞானி ஒருவரைக் கேட்டபோது அவர் பதில் உரைத்தார்:

"ஹ்ருதாகாசே சிதாபாஸ: ஸதா பாஸதி பாஸதி நோதேதி ந அஸ்தமாயாதி கதம் ஸந்த்யாம் உபாஸ்மி அஹம்?"

ஸந்தியா வந்தனம் செய்யக் கதிரவன் தோன்றும் முன்பும், மறையும் போதும் அர்க்கியம் விடவேண்டும். "என்னுடைய இதய ஆகாசத்தில் அறிவு சொரூபமான ஆத்மன் எப்போதும் பிரகாசித்துக்கொண்டே உள்ளது; அது உதிப்பதும் இல்லை, மறைவதும் இல்லை. நான் எப்படி ஸந்தியா வந்தனம் செய்வேன்?"

'ஈசுவர: ஸர்வ பூதானாம் ஹ்ருத்தேசே அர்ஜுன திஷ்டதி' என்ற கண்ணனின் வாக்கையும் சிந்தையில் கொள்ளவேண்டும்.

दिग्देशकालाद्यनपेक्ष्य सर्वगं
शीतादिहृन्नित्यसुखं निरञ्जनम् ।
यस्स्वात्मतीर्थं भजते विनिष्क्रियः
स सर्ववित् सर्वगतोऽमृतो भवेत् ॥

दिग् (திக்) திசை देश (தேச) இடம் काल आदि (கால ஆதி) காலம் ஆகியவற்றை अनपेक्ष्य (அநபேக்ஷ்ய) சார்ந்திராது सर्वगं (ஸர்வகம்) எங்குமுள்ளதும் शीत आदि हृत् (சீத ஆதி ஹ்ருத்) குளிர் முதலியவற்றை அழிப்பதும், नित्य सुखं (நித்ய சுகம்) நிலைத்த சுகத்தைத் தருவதும், निरञ्जनम् (நிரஞ்சனம்) அழுக்கற்றதுமாகிய स्वात्मतीर्थं (ஸ்வ ஆத்ம தீர்த்தம்) தன்னுடைய ஆத்மன் என்ற நதியை यः (ய:) எவன் भजते (பஜதே) வழிபடுகின்றானோ सः (ஸ:) அவன் सर्व वित् (ஸர்வ வித்) எல்லாம் அறிந்து सर्व गतः (ஸர்வ கத:) எங்கும் நிறைந்து अमृतः (அம்ருத:) அமிர்தமயமான நிலையை भवेत् (பவேத்) அடைகின்றான்.

திசை, இடம், காலம் ஆகியவற்றால் கட்டுப்படாது, எங்கும் நிறைந்து, குளிர், வெப்பம் ஆகிய இருமைகளை அழித்து, நிலைத்த சுகத்தைத் தந்து, மாசுகளை அகற்றிவிடும் தன்மையுள்ள தனது ஆத்மன் என்ற நதியைப் பூஜிப்ப

வன், எல்லாம் அறிந்து, எங்கும் நிறைந்து அமிர்த சொரூபமான பிரம்ம நிலேயை அடைகின்ருன்.

புண்ணிய நதிகளில் நீராடுவது சிறந்த செயல் எனச் சாதகர்களால் கருதப்படுகின்றது. அந்த வழக்கத்தை ஒட்டி ஆத்ம ஞானத்தில் திளேக்கும் அனுபவமும் புண்ணிய தீர்த்த நீராடல் என்று குறிப்பிடுகிருர். 'ம்ருத்யோர் மா அம்ருதம் கமய' என்று நாம் பிரார்த்தனே செய்கின்ருேம். அந்த அமிர்த நிலேயை நமக்குத் தருவது ஆத்மானந்த நீராட்டமே என்று கூறி, ஞானி எய்தும் பெரிய நிலேயையும் சுட்டிக் காட்டுகின்ருர்.

முதல் பாடலில் எத்தகைய சாதகர்கள் ஆத்ம போதம் படிக்கவேண்டும் என்று நிர்ணயித்த ஆச்சாரியர், கடைசி ஸ்லோகத்தில் பிரயோஜனம் அல்லது பலனேக் குறிப்பிட்டு முடித்துள்ளார். 'ச்ருண் வந்து விச்வே அம்ருதஸ்ய புத்திரா: — அமிர்தமயமான குழந்தைகளே, கேளுங்கள்' என்று ரிஷிகள் வருந்தி அழைத்தனர். அங்ஙனம் வருவோர் ஆத்ம போதத்தில் திளேத்து அமிர்த நிலேயில் நிலே பெற்றிட எல்லாம்வல்ல இறைவனே இறைஞ்சி நிற்போம். ஹரி ஓம் தத் ஸத். (முற்றும்)

---

செம்படவன் ஒருவன் ஏரிக்கரையில் உட்கார்ந்து ஏரிக்குள் வலேயை வீசி மீனுக்காகக் காத்துக்கொண்டிருந்தான். வலேக்குள் வராது தப்பித்துக்கொண்ட மீன்கள் அறிவுடையவைகள் ஆகின்றன. வலேக்குள் வந்து அகப்பட்டுக்கொண்ட மீன்கள் சில வலேயை விட்டு வெளியேறுவதற்கு வெகுவாக முயன்றன. முயன்றவைகளுள் சில வலேயைவிட்டு வெளியே குதித்து நீரைக் கிழித்துக்கொண்டு குதூகலமாக நீந்திச்சென்றன. செம்படவன் 'அதோ ஒரு பெரிய மீன் ஓடுவதைப் பாருங்கள்' என்று சப்தம் போட்டான். வலேயைவிட்டுக் குதித்துப் போக முடியாத மீன்கள் வலேக்குள் வெளியேறுவதற்கு வெகுவாக முயன்றன. எவ்வித பிரயத்தனமுமில்லாது வலேயுடன் சேற்றுக்குள் போய் புதைந்துகொண்டு அமைதியாகச் சில மீன்கள் இருந்தன. "நமக்கு ஆபத்து எதுவும் இல்லே. நாம் அஞ்சவேண்டியதில்லே" என்று அவைகள் எண்ணின. செம்படவன் வலேயை இழுத்து அவைகளேப் பிடித்துக் கொல்லப் போகிருன் என்பது அவைகளுக்குத் தெரியாது.

இவ்வுலகில் நான்கு விதமான மக்கள் இருக்கின்ருர்கள். முதல் வகையினர் வலேக்குள் வராது சுதந்திரமாக இருந்த மீன்கள்போல உலகப் பந்தபாசம் என்னும் வலேக்குள் அகப்படாது யாண்டும் சுதந்திர புருஷர்களாக இருக்கிருர்கள். அவர்கள் நித்திய சித்தர்கள் ஆகின்ருர்கள். நாரதர் போன்றவர்கள் அக்கூட்டத்தைச் சார்ந்தவர்களாகிருர்கள். பிறருடைய நன்மைக்காகவும், ஆன்மிக உண்மைகளே மக்களுக்கு எடுத்துப் புகட்டுவதற்காகவும் அவர்கள் உலகில் வாழ்ந்து வருகின்ருர்கள்.

வலேயிலிருந்து தப்பிச் சென்ற மீன்கள்போல உலகப்பந்தத்திலிருந்து தங்களே விடுவித்துக் கொண்டவர்கள் முக்தர்கள் என்று அழைக்கப்படுகின்ருர்கள். மகாத்மாக்கள் அக்கூட்டத்தைச் சேர்ந்தவர்களாகிருர்கள். அவர்களுடைய உள்ளம் உலக ஆசையிலிருந்து விடுபட்டு யாண்டும் இறைவனுடைய திருவடிகளேத் தியானித்துக் கொண்டிருக்கின்றது.

வலேயிலிருந்து தப்பித்துக்கொள்ள முயல்கின்ற மீன்கள் போல உலகப் பந்தத்திலிருந்து விடுபடவேண்டுமென்று அருள் வேட்கை உடையவர்களாகச் சாதனேயில் ஈடுபட்டிருப்பவர்கள் முமுக்ஷுக்களாகின்ருர்கள். அப்படி முயல்கின்றவர்களுள் சிலர் இப்பிறவியிலேயே வெற்றி அடைகின்றனர். இவர்கள் மூன்ருவது வகை மக்களாகின்ருர்கள்.

வலேயுடன் சேற்றில் புதைந்து தப்பித்துக்கொள்ள எவ்வித முயற்சியும் செய்யாது செம்படவன் கையில் அகப்பட்ட மீன்கள்போல உலகப் பந்தபாசத்தில் அகப்பட்டு மரணத்துக்குள்ளாகுபவர்கள் பந்தப்பட்ட மனிதர்களாகிருர்கள். அவர்கள் இறைவனே மறந்து உலக போகத்திலேயே மூழ்கிக் கிடக்கிருர்கள். இவர்கள் நான்காவது வகை மக்களாகிருர்கள்.

— ஸ்ரீ ராமகிருஷ்ணர்

---

# குட்டித் திருவாசகம்

( வித்துவான் ஆதி. பாலசுந்தரன் M. A. )

"காட்சி" என்ற சொல்லுக்கு அறிவு என்னும் பொருள் உண்டு. காண்—காட்சி என்று சொற்கள் உண்டாகும். காண் என்பதிலிருந்து "கண்" என்னும் சொல் உண்டாயிற்று. எனவே நல்லனவற்றை, அறிவுக்குப் பொருத்தமானவற்றைக் காண்பதுவே கண் ஆகும்.

செம்பொருளாகிய பரம்பொருளைக் கண்ட மாத்திரத்திலேயே உள்ளம் நெக்குருகி, கண்கள் ஆனந்தக் கண்ணீர் சிந்த இறைவனைப் போற்றுகின்றார்.

**உள்ளம் களித்தல்:**

"களிப்பாய் உள்ளம் கரையழிய"

சிவ பரம்பொருளைக் கண்ணால் கண்ட மாத்திரத்திலேயே ஆனந்தக் களிப்பில் அழுந்தி, மனம் எல்லையில்லாது ஓடுகிறது; அளவுக்கு மீறிய மகிழ்ச்சி அதிவீரராம பாண்டியருக்கு.

பசுபோதத் தன்மையினை ஒழித்து, அதாவது சாதாரண உயிருக்கு இயல்பாய் அமைந்துள்ள மயக்க அறிவினைப் போக்கி அருளால் ஆண்டு கொண்டவன் எம்பெருமான். இவ்வாறு சிவானந்தானுபவம் பெற்றவர் அதிவீரராம பாண்டியர். பக்குவம் அடைந்த ஆன்மாக்கள் சிவானந்தானுபவம் பெறுவர். ஆனந்தாதீத நிலையில், பொங்கி வரும் சிவானந்த வெள்ளம் அவருடைய உள்ளத்தில் கரைபுரண்டு ஓடுகிறது.

ஞானானந்த வஸ்துவாகிய சிவத்தைத் தரிசித்தவர்கள் தூய ஞான நாட்டம் பெற்றவர்கள். சிந்தை எதைச் சிந்திக்கின்றதோ அந்த வடிவமே பெறும். இந்திரிய சுகங்களை விட்டு விட்டுச் சிவத்தையே பற்றுக்கோடாகப் பற்றியவர் அதிவீரராமர். எனவே, அவருடைய உள்ளத்தில் சிவானந்த வெள்ளம் கரைபுரண்டு ஓடுகிறது.

உலகியல் வாழ்க்கையில் எவ்வளவோ ஆனந்தம் ஏற்படுவது உண்டு. அவையெல்லாம் உண்மையான ஆனந்தம் ஆகிவிட மாட்டா. இந்திராதி பதவிகளை வகிப்பதால் ஏற்படக்கூடிய ஆனந்தமும் உண்டு. இது நிலையான ஆனந்தம் ஆகிவிடாது.

காந்தத்தைப் பற்றிய இரும்பு காந்தம் ஆவது போல, தீயால் கொள்ளப்பட்ட இரும்பு தீயின் வண்ணத்தை அடைவது போல, திருக்கருவை நகர் சிவானந்தத்தைக் கண்டதும், அவருக்குச் சிவானந்தக் களிப்பு கரைபுரண்டு ஓடுகிறது.

**நாத் தடுமாற்றம்:**

"விண்ட மொழியின் நாக்குழற"

சிவனைத் துதிக்கும் மொழியொடு நாக்குத் தடுமாற......

சிவபிரானின் திருவருள் சக்தியால் மலம் ஒழியப் பெற்றவர் அதிவீரராமர். சிவனின் பஞ்ச கிருத்தியச் செயல்களையும், சிவானந்த யோக விளைவையும், சிவனது அகடிதகடனா சக்தியையும் சொல்லிப் போற்றி ஆனந்தப் பெருவெள்ளத்தில் திளைக்கிறார். இறைவனின் பெருங்கருணைத்திறனை இன்பாதீதமாகக் கொள்கின்றார்.

ஆறு அங்கங்களையும், நான்கு வேதங்களையும் ஐயம் திரிபறக் கற்று உண்மைப் பொருளை ஆராய்ந்து தெளிவு கண்டவர் அதிவீரராமர். எப்போதும் சிவனையே நினைந்து சிவத் தியானம் பண்ணுபவர். இடையறாது அவன் திருவடிகளை இவருடைய மனம் பற்றுகிறது. எப்போதும் சிவபிரானுடைய கீர்த்தியைக் கூறும் சிவபுராண நூல்களில் விளங்கும் இன்சுவை அமுதைப் பருகியவர் அவர்.

அவ்வாறு திருவருளாகிய அருளார் அமுதைத் தெவிட்டும்படி பருகியதால், போற்றிப் புகழும் மொழி, தடுமாற்றம் அடைகிறது. நாக்கும் தடுமாறுகிறது.

**மேனி புளகாங்கிதம் அடைகிறது:**

"விம்மி மேனி மயிர்பொடிப்ப"

மேனி பூரித்துப் புளகாங்கிதம் அடைய......

பஞ்சபூதங்களுக்கு இறைவராகத் திகழ்பவர் சிவபுரத்து அரசர் சிவபெருமான். தத்துவங்களை ஜடம் என்று உணர்தல் பூதசுத்தி எனப்படும். அப்படி உணர்வது இறைவன் திருவருளாலேதான், தன்னால் அன்று என்று உணர்ந்து கொள்வது ஆத்ம சுத்தி. இவ் இருவகை சுத்திகளும் கைவரப் பெற்றவர் அதிவீரராமர்.

அது மட்டுமன்று; சிவமே சகல ஜகத்காரண பூதம் என்பதையும், அச்சிவம் சிவலிங்க மூர்த்தத்தில் எழுந்தருளியிருக்கும் என்பதையும்

உணர்ந்தவர் அவர். எனவே, திருக்கருவை திருக்களா மர நீழலில் எழுந்தருளியிருக்கும் சிவலிங்கத் திருமேனி மூலம் சிவத்தைக் கண்டார்.

அவருடைய மேனி பூரித்துப் புளகாங்கிதம் அடைகிறது. உலகமோ, உலகியலோ அவரது நினைவில் இல்லை. பிரபஞ்சப் பழிப்புகளுக்கோ, பேச்சுகளுக்கோ அங்கே அவரிடத்தில் இடமில்லாது போயிற்று. பந்த நிவிர்த்தி செய்து ஞானமாகிய நேத்திரத்தால் சிவபெருமானின் ஞானத் திரு உருவத்தைத் தரிசித்தார்.

**பரவச நிலை:**

"பண்டை வசம்போய்ப் பரவசமாய்"

முன்னமே உள்ள தன்வசம் நீங்கி, பரவசப்பட்டு...

தன்னுள்ளே விளங்கும் பரமேசுவரராகிய பேரொளியை உணர்ந்து, பேரின்பத்தை வேண்டியவாறு உள்ளே நிரம்பச் செய்து கொண்டவர் அதிவீரராமர். உரைக்க முடியாத அதீதானுபவத்தில் நின்றவர் அவர்.

தற்போதம் என்னும் அமுதத்தை நிவேதனம் செய்து, தற்பரஞானமாகிய சிறந்த ஹோமாக்னி ஒளியில் சிவமாகிய பேரொளிப் பிழம்பைக் கண்டவர் அவர்.

பிருதிவி முதலாக உள்ள முப்பத்தாறு தத்துவங்களையும் மனத்தினுல் தேடித் தடுமாற்றம் கொண்டு, தன்னையும் தேடிக்காண இயலாமல் வருந்தியவர் அதிவீரராமர். சிவபிரான் கருணை பொருந்திய தனது ஞானக்கண்ணுல் அத் தத்துவங்கள் முழுமையும் கரையும்படி பார்த்து ஆண்டு கொண்டார்.

எனவே, அவருக்குத் தன்வசம் போய், பரவசம் ஏற்பட்டது. இது பைத்தியக்காரச் செயல் என்று அபக்குவிகள் பரிகாசம் செய்து சிரிக்கும்படி, தீவிர தரம் என்னும் நாலாவது சத்தியானது அவரிடத்தில் பதிகிறது. நாலாஞ் சத்தி பதிகின்றவர்களுக்கு அதாவது, தீவிர தரம் பதிகின்றவர்க்கு உடல் ஒரு சுமை போலவும், அருவருப்பைத் தரும் நோயைப் போலவும் காணப்படும் என்பது ஆன்ருேர் முடிவு.

ஞானுச்சார்ய தரிசனம் அவருக்குக் கிடைத்தது. பண்டை வசம் போயிற்று; பரவச நிலையை அடைந்தார்.

**தெவிட்டாத அருள்:**

"பரமானந்தத் தெளி நறவம்
உண்டு தெவிட்டா அருள் புரிந்தான்"

சிவானந்தமாகிய தெளிந்த தேனைப் பருகித் திகட்டாதிருக்க அருள் புரிந்தான் கருவைப் பெருமான்.

எங்கும் நிறைந்த பராபரம் என்றும், விஞ்ஞானம் என்றும் [பசு பாச ஞானங்களுக்கு மேற்பட்ட ஞானம்], நிராமயம் [ துன்பம் இல்லாமை] என்றும் பரப்பிரம்மத்தை நூல்கள் எடுத்து ஓதுகின்றன. அப்பரப்பிரம்மமே சிவலிங்க வடிவமாக இவருக்குக் காட்சி கொடுத்தது.

எல்லா உயிர்களுக்கும் பயனுக உள்ளன இம்மைப் போகமும், மறுமைப் போகமும் ஆகும். இவ்விரண்டையும் அனுக்ரஹம் செய்பவன் யாவன்? எல்லாம் தானுகி, எல்லா உயிர்களுக்கும் உயிராகி நின்றருளும் சிவபெருமான் அருள்பாலிக்கிருன். அச்சிவபெருமானை முற்றிலும் உணர்ந்தவர்களுக்கு மனம், வாக்கு, காயம் என்னும் இவற்ருல் வழிபடக் கூடிய உண்மையாகிய சிவபக்தி நெறி முதிர்ச்சி அடையும்.

அவ்வாறு சிவபக்தி நெறி மிகுந்து, சிவானந்தப் பெருந்தேனைப் பருகியவர், பருகுவதற்குப் பாக்கியம் பெற்றவர் அதிவீரராமர்.

ஆத்மா, பாசத்தை விட்டு நீங்கிப் பரம் பொருளைத் தரிசித்தல் பரஞானம். அந்தப் பரஞானத்தோடு கூடி, தன்னுடைய செயலை விட்டு விடுவது ஆத்ம சுத்தி. அந்தப் பரஞானத்தால் குற்ற மற்ற சிவரூபத்தைப்பெற்று அதிலேயே அழுந்தித் திளைத்தல் ஆத்மலாபம்.

பாசத்திலிருந்து நீங்கி, பரஞானத்தைத் தரிசித்துப் பரஞானம் எய்தியவர் அதிவீரராமர். பரஞானத்துடன் கூடி தம்முடைய செயலை விடுத்து ஆத்மசுத்தி அடைந்தவர் அவர். சிவானந்தப் பெருந்தேனைப் பருகி, சிவரூபத்தைப் பெற்று அழுந்தித் திளைத்து ஆத்மலாபம் அனுபவித்தவர் அவர்.

"ஞான நாட்டம் பெற்றபின் யானும் நின் பெருந்தன்மையும் கண்டேன் காண்டலும் என்னையும் கண்டேன்" என்பது பட்டினத்தாரின் திருவாக்கு.

சிவானந்தத் தேனைத் தெவிட்டாத நிலையில்

பருகி, தன்னை மறந்து திளைத்து இறைவனை யும் தன்னையும் ஒன்ருகக் காண்கிற அத்வைத நிலையை அடைகிருர் அதிவீரராம பாண்டியர். **கருவைக் கடவுள் உமாமகேசுவரராய்க் காட்சி அருளல்:**

''உரக ஆபரணத் திருமார்பும்
உமைஒப் பனையாள் இடப்புறமும்
சிரமா லிகையும் புரிசடையும்
செய்ய வாயும் கறைமிடறும்
வரத அபயமும் மழுமானும்
வயங்கு கரமும் மலரடியும்
கருவா புரியான் வெளிப்படுத்திக்
காட்சி கொடுத்து நின்ருனே.''

சர்ப்ப ஆபரணத்தை அணிந்த திருமார்பும், அழகிய உமையம்மையை இடப் புறமும், பிரம்ம கபாலங்களால் தொடுக்கப்பட்ட மாலை யும் முறுக்கேறிய சடையும், சிவந்த வாயும், நீலகண்டமும், அடியார்களுக்கு வரமும், அபய மும் அளிக்கும் திருக்கரச் சின்னமும், மழுவும் மானும் ஏந்தியுள்ள திருக்கரங்களும், தாமரை மலர் போன்ற திருவடியும் ஆகிய இவற்ருேடு திருக்கருவை ஊரில் எழுந்தருளிய இறைவன் சிவபிரான் காட்சி கொடுத்தருளினன் என் கிருர் அதிவீரராமபாண்டியர்.

எளிய கோலம் கொண்டவன் சிவன். நாகமே அவனுக்கு அணிகலனுகப் பயன்படுகிறது: உமாதேவியை இடப்பாகத்திலே உடையவன் அவன்.

நின்மலனுகிய சிவனிடத்து விளங்கிய அரு ளாகிய ஞானமே அவனது சக்தியாகும். அந் தச் சக்தி ஞானப் பிரகாசமாக இருக்கும். அச் சக்தி சிவத்தோடு இணைந்தே விளங்கும். அச் சக்தியின் செயல் யாது? ஆன்மாக்களை, அநாதி காலம் தொட்டு மயக்கி நிற்கிற எல்லா வித மலங்களையும் அழித்து, தனக்கு முதலா கிய சிவத்தைக் காட்டும். ஞானமாகிய சக்தி, தனியாக அல்லாமல் சிவத்தோடு, அக்னியில் சூடுபோல அபின்னமாய் உள்ளது. எனவே, சக்தியாகிய உமையே பாகம் பிரியாளாகச் சிவனது வாமபாகத்திலே எழுந்தருளி உள் ளாள். சிவனைப் போற்றுகிருேம்; சக்தியை யும் போற்றுகிருேம்.

கௌரி மந்திரம் உமாதேவியாரைப் பற்றி யது. இம்மந்திரத்தை ஒரு லட்சம் தடவை ஜபித்தால் சாலோக பதவி கிட்டும். இரண்டு லட்சம் தடவை ஜபித்தால் சாமீப்ய பதவி கிடைக்கும். மூன்று லட்சம் தடவை ஜபித்தால் சாரூப பதம் பெறலாம். நான்கு லட்சம் தடவை ஜபித்தால் சாயுஜ்ய பதம் கிடைக்கும்.

''தம்மிடத்து அணங்கின் மனுவை ஓதிப் பழகிய பார்ப்பன மகளைப் பார்ப்பதியின் வடிவாக்கி'' — உமாதேவியாரது திருமந்தி ரத்தை ஜபித்துப் பழகிய அந்தணப் பெண்ணை உமாதேவி வடிவமாகவே சிவபெருமான் ஆக்கி யருளினர் என்பது பரஞ்ஜோதி முனிவர் கூறும் உண்மை.

கபால ஓட்டு மாலை, செஞ்சடை, அபய சின் முத்திரை இவற்றையெல்லாம் வெளிப்படை யாகக் காட்டி ஆட்கொண்டருளினன் சிவபெரு மான்.

மண்ணுலகம் பூவுலகம், விண்ணுலகம் சுவர்க்கம், வானோர் உலகம் தேவருலகம். பரிபாக விசேஷத்தால், மண்ணுலகில் உள் ளோர் சகலர் எனப்படுவர். விண்ணுலகில் உள்ளோர் பிரளயாகலர் எனப்படுவர். தேவரு லகில் உள்ளோர் விஞ்ஞானகலர் எனப்படுவர்.

மண்ணுலகில் உள்ளவர்களுக்கு இறைவன் குருவாக எழுந்தருளி வந்து காட்சி கொடுப் பான். சுவர்க்கத்தில் உள்ளவர்களுக்கு நேருக்கு நேர் நின்று காட்சி தருவான். தேவ ருலகில் உள்ளவர்களுக்கு மனத்தில் அறிவு சொருபமாய் எழுந்தருளிக் காட்சி அளிப்பான்.

அதிவீரராமர் ஜீவன் முக்தி நிலையை அடைந் தவர். மண்ணிலே விண்ணைக் கண்டவர். எனவே, மான், மழு, ஜடாபாரத்துடன் எழுந் தருளி நேருக்கு நேர் காட்சி கொடுத்தான் சிவ பெருமான்.

முந்தின பாடலில் ஞானமே திரு உருவான சிவபெருமான் குருமூர்த்தமாகத் தமக்கு அருள் புரிந்ததைக் கூறினர். இப்பாடலில், சக்தி யைப் பாகமாக உடைய உமாமகேசுவரத் திருக்கோலச் சிறப்பைக் கூறுகிருர்.

'' நின்ற நிலையும் செய்தொழிலும்
நினைத்த குறியும் வழிபாடும்
ஒன்று பதமும் பதம்கடந்த
உண்மைப் பொருளும் அறியேனை
இன்றுஉன் அடியா ருடன்கூட
எண்ணம் புரிந்த இனியஅருள்

நன்று நன்று தமிழ்க்கருவை
நம்பா உம்பர் நாயகனே!''

செந்தமிழ் வழங்கும் திருக்கருவையில் எழுந்தருளியுள்ள இறைவனே! தேவர்களுக்குத் தலைவனே! யான் நிற்கின்ற நிலை இன்னது என்பதையும், யான் செய்கின்ற செயல்களையும், அந்த அந்தச் செயல்களில் நின்று கருதும் மூர்த்திகளுக்குச் செய்யும் வழிபாட்டையும், அவ்வழிபாட்டால் கைகூடும் பதவிகளையும், அப்பதவிகளைக் கடந்து நின்ற முக்தியையும் சிறிதும் அறியாத என்னை இப்போது, உம் அடியாரோடு கூடி வாழத் தேவரீர் திருவுளம் கொண்டருளியது மிகவும் நன்று.

''நின்றநிலை'' என்பது ''நிற்கின்ற நிலை'' என நிகழ்காலப் பொருளில் வருவதாகும். யான் என்று, இங்கே அதிவீரராமராகிய ஆன்மாவைச் சொல்லிக் கொள்கிறார்.

ஆன்மாக்கள் பல உண்டு என்பதையும், ஒன்றே பலவாகப் பரிணமிக்கும் என்னும் கொள்கையையும் நாம் ஏற்றுக்கொண்டிருக்கிறோம். ஆன்மா, தான் செய்கிற கருமவினைக்கு ஏற்றவாறு உடம்பைப் பெறுகிறது.

பல பிறவிகளிலும் செய்த சரியா கிரியா யோகங்களால் இப்பிறவியில் அதிவீரராமருக்குப் பெறுதற்கரிய மானிடப் பிறவி வந்து வாய்த்தது. "அரிது அரிது மானிடராகப் பிறத்தல் அரிது"; ''வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி" என்பன அனுபவ மொழிகள் ஆகும்.

உடம்பினுள்ளே நிலைபெற்ற ஆன்மா தான் அனுபவிக்கத் தக்க செய்திகளை இந்திரியங்களாலே கண்டுகொள்கிறது. மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் அந்தக் கரணங்களினால் செய்திகளைக் கிரகித்துக் கொள்கிறது.

அதிவீரராமரும் தாம் அனுபவிக்க வேண்டியவற்றை இந்திரிய வசப்பட்டு, மனம்போன போக்கில் அனுபவித்தார். அனுபவிக்கும் காலத்தில் நல்லதன் நலனும் தீயதன் கேடும் அவர் உணரவில்லை. இந்திரியங்கள் சடப் பொருள்கள் என்பதை; இந்திரியங்களின் வசப் பட்டுவிட்டதால், அவரால் உணரமுடியாது போயிற்று. ஆன்மா, சிற்றறிவு உடையது என்பதை அவர் அறிந்துகொள்ள முயலவில்லை.

வாழ்க்கையில் அவருக்குக் கிடைத்த அனுபவங்கள் அவரை உண்மைகளை உணர வைத்தன. ஆணவப் பெருக்கால் மறைப்புண்டு அவஸ்தைப்படுகிறோம் என்னும் உண்மை அவருக்குத் தோன்றலாயிற்று.

இது அவர் நிற்கின்ற நிலையாகும்.

---

## ஸ்ரீ தேவீ மாஹாத்மியம்

| | |
|---|---|
| या देवी सर्वभूतेषु बुद्धिरूपेण संस्थिता । | யா தேவீ ஸர்வபூதேஷு புத்திரூபேண ஸம்ஸ்திதா |
| नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः ॥ | நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம: |
| या देवी सर्वभूतेषु शक्तिरूपेण संस्थिता । | யா தேவீ ஸர்வபூதேஷு சக்திரூபேண ஸம்ஸ்திதா |
| नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः ॥ | நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம: |
| या देवी सर्वभूतेषु शान्तिरूपेण संस्थिता । | யா தேவீ ஸர்வபூதேஷு சாந்திரூபேண ஸம்ஸ்திதா |
| नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः ॥ | நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம: |
| या देवी सर्वभूतेषु श्रद्धारूपेण संस्थिता । | யா தேவீ ஸர்வபூதேஷு ச்ரத்தாரூபேண ஸம்ஸ்திதா |
| नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः ॥ | நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம: |
| या देवी सर्वभूतेषु दयारूपेण संस्थिता । | யா தேவீ ஸர்வபூதேஷு தயாரூபேண ஸம்ஸ்திதா |
| नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः ॥ | நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம: |
| या देवी सर्वभूतेषु तुष्टिरूपेण संस्थिता । | யா தேவீ ஸர்வபூதேஷு துஷ்டிரூபேண ஸம்ஸ்திதா |
| नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः ॥ | நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம: |
| या देवी सर्वभूतेषु मातृरूपेण संस्थिता । | யா தேவீ ஸர்வபூதேஷு மாத்ருரூபேண ஸம்ஸ்திதா |
| नमस्तस्यै नमस्तस्यै नमस्तस्यै नमो नमः ॥ | நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம: |

புத்தி, சக்தி, சாந்தி, சிரத்தை, தயை, திருப்தி, தாய் வடிவங்களாக எந்தத் தேவி எல்லா உயிர்களிடத்தும் உறைகின்றாளோ அவளுக்கு நமஸ்காரம், நமஸ்காரம், நமஸ்காரம்.

---

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம்-181

*989.* वाञ्छितार्थप्रदायिनी வாஞ்சிதார்த்த ப்ரதாயினீ—மக்கள் வேண்டுவதை வழங்கு பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

பிரபஞ்சத்திலுள்ள உயிர்கள் அனைத்தும் தேவைகளை அடிப்படையாகக் கொண்டிருக் கின்றன. அத்தேவைகளை நிறைவேற்றிக் கொள்ளுதற்கே அவை யாவும் வடிவெடுத்து மண்ணுலகுக்கு வந்திருக்கின்றன. அவை களின் தேவைகளுக்கு வரம்பு இல்லை. அந் தந்த உயிரின் இயல்பு, மனப்பான்மை, சூழ் நிலை ஆகியவைகளுக்கேற்றவாறு அவை யாவும் வேண்டுவன எல்லாம் எல்லையில் அடங்காதவைகளாம். அத்தனை விதமான உயிர் வகைகளுக்கும் அவ்வவற்றின் தேவைக்கேற்ற வாறு அன்னை பராசக்தி தாராளமாக எடுத்து வழங்கிக்கொண்டேயிருக்கின்றாள். இனி,உயிர் கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் அவை களின் வாழ்விற்கேற்றவாறு அன்னை பராசக்தி தானே பொருத்தமானவைகளைப் பிரபஞ்சம் எங்கும் அமைத்து வைத்திருக்கின்றாள். சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். தூய காற்று இல்லாது உயிர்வகைகள் நெடுநேரம் வாழ்ந்திருக்கமாட்டா. சிறிது நேரத்தில் அவையாவும் அழிந்துபட்டுப்போம். ஆகை யினால் உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாத காற்றை அன்னை பராசக்தி தாராளமாக உல கெங்கும் நிறைந்திருக்கும்படி செய்திருக்கிறாள். காற்றுக்கு அடுத்தபடியாக அமைந்திருப்பது சூரியப் பிரகாசம், நீர் ஆகியவைகளாம். அத்த கைய பொருள்களையும் உலகெங்கும் நிறைந் திருக்கும்படி அன்னை பராசக்தி அமைத்துள் ளாள்.

சிற்றுயிர்கள் பேருயிர்களாகப் பரிணமிப் பதற்கு ஏற்ற சூழ்நிலைகளையும் வசதிகளையும் அன்னை பராசக்தி வேண்டியவாறு அமைத்து வைத்திருக்கிறாள். அந்தந்த உயிருக்கேற்ற உணவு வகைகளையும் அவள் படைத்து வைத் திருக்கிறாள். இவை யாவற்றுக்கும் மேலாகச் சான்றோர்கள் விரும்புவது தூயவாழ்வும், பக் தியும், ஞானமுமேயாம். அத்தகைய அரிய பெரிய செல்வங்களையும் அன்னை பராசக்தி யாண்டும் உடைத்திருக்கிறாள். பக்தி பூர்வ மாக அவைகளை வேண்டுபவர்களுக்குத் தங்கு தடையின்றி அவள் கொடுத்து உதவி வருகின் றாள். ஸ்ரீ ராமகிருஷ்ணரின் ஜீவிதத்தை இதற் குச் சான்றாக எடுத்துக்கொள்ளலாம். ஐதிக மாக வந்துள்ள ஆத்ம சாதனவகைகள் அனைத்தையும் ஒன்றன்பின் ஒன்றாகப் பழக அவர் விரும்பினார். அதற்கேற்ற சூழ்நிலையைத் தக்க தருணத்தில் கல்கத்தாவுக்கு வடக்கே தட்சிணேசுவரத்தில் அன்னை பராசக்தி அமைத்து வைத்துள்ளாள்.

ஆகவே, உடலைப் பேணுதலில் துவக்கி முற்றிலும் ஆத்மபரிபாகம் அடையும் பரியந்தம் ஜீவர்களுக்குத் தேவையானவை யாவற்றை யும் அன்னை பராசக்தி சர்வகாலமும் வழங்கி வருகிறாள். ஆதலால்தான் அவளுக்கு வாஞ்சி தார்த்த ப்ரதாயினீ என்னும் பெயர் வந் துள்ளது.

*990.* अभ्यासातिशयज्ञाता அப்யாஸாதிசய ஞாதா – அப்பியாசத்தின் பெருக்கினால் நன்கு அறியப்படுகிறவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

ஜீவர்கள் எல்லாரும் தாங்கள் வாழ்ந்து வருகிற சூழ்நிலைகளைப் பற்றி மேலும் மேலும் அதிகமாகத் தெரிந்துகொள்ள விரும்புகிறார் கள். அவர்களுடைய விருப்பத்துக்கும் முயற் சிக்கும் ஏற்றவாறு அவர்களுக்குத் தேவையா யிருக்கும் நலன்களையும் சூழ்நிலை வசதியையும் நல்லறிவையும் அவள் வழங்கி வருகிறாள்.

நவீன மனிதன் பிரபஞ்சத்தைப் பற்றிச் செய்த ஆராய்ச்சிக்குப் பௌதிக விஞ்ஞானம் என்னும் பெயர் வந்துள்ளது. இத்துறையில் மக்கள் எடுத்துக்கொள்ளும் முயற்சிக்கு ஏற்ற வாறு பிரபஞ்சத்தைப் பற்றிய ஞானம் விரி வடைந்து கொண்டே வருகிறது. பிரபஞ்சத் தில் உள்ள பொருள்களைப் பயன்படுத்தும் முறைகளும் விரிவடைந்து கொண்டே வருகின் றன. இதினின்று நவீன மனிதன் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறான். எத்துறையிலாவது எப்பொரு ளுக்காவது பஞ்சம் வந்து விடாது என்பது அம்முடிவாம். ஏனென்றால் உலகில் உள்ள பொருள்கள் அழிந்துபட்டுப் போவதில்லை. ஒரு பொருள் மற்றொரு பொருளாக மாறி

இருந்து பிரபஞ்சத்தில் இடம் பெற்று வருகிறது. ஆதலால் இயற்கையில் அமைந்துள்ள ஏதேனும் ஒரு பொருளினின்று மனிதனுக்குத் தேவையான மற்றொரு பொருளை அமைத்துக் கொள்ளலாம் என்னும் முடிவுக்கு மனிதன் வந்துள்ளான். இதற்குச் சான்று ஒன்றும் எடுத்து இயம்பலாம். உலகெங்கும் கற்பாறையாக அமைந்து கிடக்கும் பொருளினின்று அற்புதமான கம்பளங்கள் செய்து கொள்ளலாம் என்னும் கோட்பாட்டை நவீன மனிதன் செய்து காட்டியிருக்கிறான்.

இவ்வுண்மை பரஞானத்துக்கும் பொருந்துகிறது. பரஞானம் மிகக் கடினமானது என்பது பழங்காலக் கொள்கை. ஆனால் இக்காலத்தில் தோன்றி வருகின்ற தீர்க்கதரிசிகள் அம்பிகையின் அருளால் பரஞானத்திற்கு நிகரானதும் எளிதில் அடையக்கூடியதும் வேறெதுவும் இல்லை என்பதைக் குறித்து உறுதி கூறுகிறார்கள். எனவே, எல்லாத்துறைகளிலும் முயற்சிக்கேற்றவாறு ஜீவர்கள் முன்னேற்றம் அடைந்து வருகிறார்கள். அதற்கேற்ற உதவியையும் அன்னை பராசக்தி கருணை கூர்ந்து நல்கி வருகிறாள் என்பது இந்த நாமத்தின் உட்பொருளாகும்.

**991. षडध्वातीतरूपिणी ஷடத்வாதீத ரூபிணீ**—ஆறு மார்க்கங்களுக்கும் அப்பாற்பட்டவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

வேதாந்த தர்சனத்துக்கு உண்டான ஆறு மார்க்கங்கள் இருக்கின்றன. ஷண்மதங்கள் என அவைகள் பகரப்படுகின்றன. அவையாவன சைவம், சாக்தம், வைஷ்ணவம், காணபத்யம், கௌமாரம், சௌரம் என்பனவாம். வேதாந்தம் என்னும் அடி மரத்தினின்று கிளம்பி வந்துள்ள ஆறு கிளைகள் எனவும் இவை பகரப்படுகின்றன. இந்த ஆறனுள் ஏதேனும் ஒரு மார்க்கத்தைச் சாதகன் ஒருவன் தீவிரமாகக் கையாளுவானாகில் அவன் பரத்தை அடையத் தகுதி உடையவனாகிறான். பரத்தை அடையப் பெற்றான பிறகு மார்க்கம் பொருளற்றதாகிறது. ஓர் ஊரினின்று வேறு ஓர் ஊருக்குப் போவதற்கு வண்டி வாகனம் ஏதேனும் ஒன்றைப் பயன்படுத்துகிறோம். அவ்வூரை அடைந்தான பிறகு வண்டிக்கோ வாகனத்துக்கோ தேவையில்லை. அங்ஙனம் அன்னை பராசக்தியின் அருளால் அவளை அடையப் பெறுகிறவன் ஆறு சமயங்களுக்கும் அப்பாற்பட்ட பரதேவதையை அடையப் பெற்றவனாகிறான்.

இனி, ஓசையையும் மொழியையும் மந்திரத்தையும் முகாமையாக வைத்துக்கொண்டு அன்னை பராசக்தியைச் சாதகன் ஒருவன் அடையப்பெறுகிறான். அத்தகைய உபாயங்கள் ஆறு விதமானவைகள் இருக்கின்றன என்று நூலோர் கூறுகின்றனர். அந்த ஆறனுள் வர்ணம் என்பது ஒன்று. எழுத்துக்கள் அக்ஷரம் எனவும் வர்ணம் எனவும் பகரப்படுகின்றன. ஓசையின் திரிவுகளாக இந்த வர்ணங்கள் அமைந்திருக்கின்றன. 'ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே' என்பது கோட்பாடு. ஓசையை முறையாக ஒலிக்குமிடத்து அது மன அமைதியை உண்டுபண்ணுகிறது. அமைதியுற்ற மனது பரம்பொருளின் தர்சனத்துக்கு உற்ற கருவியாக அமைகிறது. ஆகவே, முறையாக ஓசையை உண்டுபண்ணுவது சாதனத்தில் இன்றியமையாத பகுதி என்பது கோட்பாடு. பதம் அல்லது சொல் அடுத்த மார்க்கமாக வந்தமைகிறது. ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட எழுத்துக்கள் சேர்ந்து சொல்லாகிறது. சொல்லைச் சரியாக உச்சரிப்பதும் ஆத்ம சாதனத்துக்கு உற்ற உபாயமாம். கசடறக் கற்கிற ஒருவன் சொற்களைத் தெளிவுற உச்சரிக்கிறான். அந்தக்கரண சுத்திக்கு அது அறிகுறியாகிறது. ஆகவே, சொல்லைச் சரியாக உச்சரிப்பதும் ஆத்ம சாதனங்களில் ஒன்றாகிறது. மொழிகள் யாவும் சொற்கள் மயமாக அமைந்திருக்கின்றன. அவைகளுள் அலாதியாக தெய்விகச் சக்திவாய்ந்த சொற்கள் சில இருக்கின்றன. அவைகள் மந்த்ரம் எனப்பெயர் பெறுகின்றன. எது மனதை உறுதிப்படுத்துகிறதோ அது மந்த்ரம். சிவ, நாராயண, சக்தி, ராம, கிருஷ்ண, உமா ஆகியவைகளுக்கு அலாதியான தெய்விக வல்லமை உண்டு. சாதகன் ஒருவன் அவைகளில் ஏதேனும் ஒன்றை உறுதியாகப் பிடித்து உச்சரித்து வருவானாகில் அம்முயற்சியின் விளைவாக அந்தக்கரண சுத்தி இயல்பாகவே அவனுக்கு வந்தமைகிறது. எனவே, மந்திரத்தை முறையாகப் பயன்படுத்துவதும் நல்லதோர் ஆத்ம சாதனமாகிறது.

பிரபஞ்ச அமைப்பில் ஒழுங்குப்பாடு இருக்குமாகில் அது கலை எனவும் ஆங்கிலத்தில் Art எனவும் இயம்பப் பெறுகிறது. ரூபமயமாகப் பிரபஞ்சம் தோன்றுகின்றது. ஒவ்வொரு ரூபம் அல்லது வடிவத்திலும் ஒழுங்குப்பாடு ஒன்று இருக்கிறது. அந்த ஒழுங்குப்பாடே நிறைவுக்கு அறிகுறியாகிறது. பிரபஞ்சத்தில் அமைந்துள்ள ஒழுங்குப்பாடுகளைக் கலைகள் எனக் கூறுகிறோம். சிவனும் சக்தியும் அறுபத்து நான்கு கலைகளாகப் பிரபஞ்சம் எங்கும் ஊடுருவி வியாபித்திருக்கிறார்கள் என்பது கோட்பாடு. சாதனத்தில் மேலே வருகிற ஒருவன் ஏதேனும் ஒரு கலையிலாவது சிறந்தவனாக அமைவது திண்ணம். அதன் வாயிலாக அவன் ஆத்ம பரிபாகம் அடைந்து வருகிறான்.

புவனம் அல்லது பிரபஞ்சத்தின் அமைப்பு ரூபங்களை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. அண்டங்களையெல்லாம் ஆராய்ந்து பார்க்கின்றவிடத்து ஒவ்வோர் அண்டமும் ஒரு புவனமாக இலங்குகிறது. ஒரு புவனத்தின் பேரமைப்பின் வாயிலாக நிறைவு நிலையிருக்கும் பரம்பொருள் ஏகதேசம் விளங்கப் பெறுகிறது. ஒழுங்காக அமைகிற வடிவம் தத்துவத்துக்கு விளக்கமாகிறது. முக்கோணம், வட்டம் ஆகியவைகளுக்கு வடிவங்கள் இருக்கின்றன. அவைகளைச் சரியாக அமைப்பது ஒரு கலை. அப்படி அமைந்துள்ள வடிவம் தத்துவம் அல்லது உண்மைக்கு விளக்கமாகிறது. என்றைக்கும் மாறுத மெய்ப்பொருள் தத்துவ சொரூபமாயிருக்கிறது. இங்ஙனம் ஓசையாகத் துவங்கியுள்ள பிரபஞ்சம் படிப்படியாகப் பரிணமித்துப் பிரபஞ்சத்தில் வந்து முடிவுறுகிறது. இவைகளை மார்க்கங்களாகக் கொண்டு ஆத்ம சாதகன் பயன்படுத்தி வருவானாகில் பிரபஞ்ச அதீதத்தில் உள்ள பரவஸ்துவைச் சென்றடைதற்கு இவை நல்ல கருவிகளாகின்றன என்பது இந்த நாமத்தின் பொருள்.

---

## தொண்டும் பக்தியும்

தனக்கெனப் பணி செய்யாது உலகத்துக்கெனவும் தெய்வத்துக்கென்வும் செய்கின்ற பணி தொண்டு ஆகும். தூய பாவனையில் உயிர்களிடம் செலுத்தும் அன்பும் தெய்வத்திடம் செலுத்தும் அன்பும் பக்தி எனப்படும். கல்வியில் தொண்டும் பக்தியும் வேண்டியவாறு இடம் பெறவேண்டும். சிறுவர்கள், சிறுமியர்களுடைய உள்ளம் தொண்டிலும் பக்தியிலும் ஊறி வளர்ந்துவர வேண்டும். வெறுமனே புத்தகத்திலுள்ள புள்ளிவிவரங்களைத் தெரிந்து ஞாபகம் வைத்துக்கொள்வதன்மூலம் கல்விமான்கள் ஆகிவிடமுடியாது. சிறந்த பண்பாளர்களாக, அறிஞர்களாக, பரந்த மனப்பான்மை உடையவர்களாக, சுயநலமற்றவர்களாகச் சிறுவர்கள், சிறுமியர்களை வளர்க்கப் பள்ளிக்கூடங்களில் தொண்டையும் பக்தியையும் சிறுவர்கள், சிறுமியர்களுடைய உள்ளத்தில் புகுத்துதல்வேண்டும்.

ஒவ்வோர் ஊரிலும் ஆலயம் அமைந்திருக்கிறது. 'கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்பது பழமொழி. கோயிலைக் கல்வி ஸ்தாபனம் நன்கு பயன்படுத்தி வர வேண்டும். கோயில் முழுவதையும் கூட்டித் துப்புரவு செய்து நீர் கொண்டு கழுவிக் கோயிலைச் சுத்தம் பண்ணுகின்ற பணியில் சிறுவர்கள், சிறுமியர்களை ஈடுபடுத்தலாம். அச்செயல் அவர்களிடத்தில் தொண்டு மனப்பான்மையை வளர்க்கும். பள்ளிக்குழந்தைகள் அனைவரும் சந்நிதியின் முன் அமர்ந்து ஓர் ஐக்கிய வணக்கம் நிகழ்த்துதல் வேண்டும். இறைவனுடைய நாமத்தை உச்சரித்தல், இறைவனைத் துதிசெய்து பாடுதல், இறைவனுடைய மகிமையை வாசிக்கக் கேட்டல், தியானம் முதலியவை அதில்இடம்பெறவேண்டும். முக்கால் மணியிலிருந்து ஒரு மணி நேரம் ஐக்கிய வணக்கத்தைச் சந்நிதியின்முன் சிறுவர்கள், சிறுமியர்களைக்கொண்டு நிகழ்த்தினால் அது அவர்களுடைய உள்ளத்தில் பக்தியை வளர்க்கும்.

திருப்பராய்த்துறை விவேகானந்த உயர்நிலைப்பள்ளி மாணவ, மாணவிகள் திருப்பராய்த்துறை ஊரில் அமைந்துள்ள தாருகாவனேஸ்வரர் ஆலயத்தைப் பெருக்கிச் சுத்தம் செய்து நீர்விட்டுக் கழுவித் தூய்மைப்படுத்தி வருகின்றனர். வாரம் ஒருமுறை ஆலய வழிபாடும், மாதம் ஒருமுறை ஐக்கிய வணக்கமும் செய்துவருகின்றார்கள்.

---

# ஸ்ரீமத் பாகவதம்

( சுவாமி ஸதானந்தர் )

ஸ்ரீ கிருஷ்ணன் அர்ஜுனன் பேரில் அலாதியான அன்புடையவராக உள்ளார். குருக்ஷேத்திரப் போர்க்களத்தில் அர்ஜுனன் கேட்டுக்கொண்டபடி ஸ்ரீ கிருஷ்ணன் ரதத்தை எதிரி படைகளுக்கு முன்பாக நிறுத்தினர். அப்போது ஸ்ரீ கிருஷ்ணன் தம் பார்வையால், கண்ணேட்டத்தினுல் எதிரிகளின் வல்லமையை எல்லாம் கரந்தெடுத்து விட்டார். "என் மனது என்பிரபுவையே சதா நாடியிருக்கட்டும். எதிரிகளின் படையின் முன்னணியில் என்னையும் ஆச்சாரியனையும் பார்த்த அர்ஜுனனுக்கு எங்களிடம் உள்ள அன்பினுலும் மரியாதையினுலும் பெருவருத்தம், மனக் குழப்பம், தடுமாற்றம் உண்டாயிற்று. உற்ருர் உறவினர்களையும் நண்பர்களையும் எதிர்த்துப் போர் புரிய வேண்டிய, கொல்ல வேண்டிய அவலமான நிலையைக் குறித்தும் பேர் அழிவைக் குறித்தும் அவனுக்கு வருத்தமும் நடுக்கமும் உண்டாயின. அப்போது என் பிரபு அர்ஜுனனுக்கு ஆத்மாவின் நிஜசொருபம், அதன் அழியாத் தன்மையைப் போதித்து அவனது மதிமயக்கத்தைப் போக்கினர். ஆகையால் மனதே உன் பிரபுவையே பற்றிப் பிடித்துக் கொள்.

'யுத்த ஆரம்பத்தில் எல்லா விதத்திலும் உதவிபுரிவேன். ஆனல் நான் ஆயுதம் எடுப்பதில்லை' என்று என் பிரபு பாண்டவர்களுக்கு வாக்குத் தந்திருந்தார். ஆனல் எனக்கோ என் பிரபுவை ஆயுதம் தாங்கிய கோலத்தில், யுத்த சன்னத்தனய் இருக்கும் கோலத்தில் தரிசிக்க வேண்டும் என்கிற பெரு விருப்பம் இருந்தது. மூர்க்கனுகிய துரியோதனனிடமும் என்னல் ஏற்படுகிற சேனையின் அழிவைப் பொறுக்கமாட்டாதவனய், ஸ்ரீ கிருஷ்ணனையும் கொதித்தெழுந்து ஆயுதம் ஏந்த வைக்கிறேன் என்று சமாதானம், ஆறுதல் சொல்லியிருந்தேன். இவைகளை உணர்ந்த என் பிரபு தம் வாக்குறுதி நிறைவேருவிட்டால் போகிறது, பக்தனது வாக்குறுதியும் பெரு விருப்பமும் நிறைவேற வேண்டும் என்று எண்ணம் கொண்டான். அவன் பக்தர்களிடத்து வைத்துள்ள அன்புக்கு அளவுண்டோ, தடையுமுண்டோ? ரதத்தினின்று குதித்துச் சக்கரதாரியாய் என்னை நோக்கி ஓடி வந்தான். அந்தச் சமயம் அவனது மேலாடை உத்தரீயம் அவன் சரீரத்தினின்று வழுவித் தரையில் புரண்டு கொண்டு வந்தது. தமலாமரத்தின் பச்சை நிறம் வாய்ந்த அவன் சரீரத்தின் பேரில் நூற்றுக்கணக்கான கூரான அம்புகளைச் சொரிந்தேன். அவன் ரத்தவெள்ளத்தில் குளித்து எழுந்தது போன்று தோன்றினன். அர்ஜுனன் மீண்டும் மீண்டும் பகவானை ரதத்துக்குத் திரும்பும்படி எவ்வளவு வேண்டியும் அவன் திரும்பவில்லை. யானையின் மேல் பாயும் சிங்கம் போன்று என்னை நோக்கிப் பாய்ந்தான். இந்த ஜகத்துக்கெல்லாம் நாதன், தன் நண்பன் அர்ஜுனன் பேரில் உள்ள அன்பிற்காகச் சாரதி பணியை மேற்கொண்டவன், தியானத்தினுலும் அடைய முடியாதவன், திரிலோக சரண்யன், (மூன்று உலகிலும் சரணடையத் தகுந்தவன்) ஜகத் ஏக கம்யன் (இவ்வுலகின் ஒரே புகலிடம்) ஆகிய என் பிரபுவின் திருவடிகளில் இன்று அடைக்கலம் புகுகிறேன். இப்பொழுது என்னுடைய பிரபு சாந்த மூர்த்தியாக, ஸௌம்யனுக, மனமோகனுகக் காட்சி தந்து கொண்டிருக்கிருன்! என் நீண்ட வாழ்வின் கடைசிப் பகுதியில், மரணத்தறுவாயில் என் மனது என் பிரபுவின் திருவடிகளில் நிலை பெற்று இருக்கட்டும். யுத்த களத்தில் வீழ்ந்து மரணமடைந்த போர்வீரர்கள் எல்லாரும் கண்ணனைப் பார்த்த பாக்கிய வசத்தால் முக்தியடைந்தனர். கடவுளின் அன்பின் மகிமை, அருள்கடாக்ஷம் போற்றி, போற்றி! அது வாக்கினுல் விளக்க முடியாதது. இந்த நந்த குமாரன் தன் மோஹன வடிவத்தாலும், ஆனந்தக்கோலத்தாலும், மனதைக் கவர்ந்திழுக்கிற முறுவலாலும், அவனது சிருங்கார சேஷ்டைகளாலும் கோபிகாஸ்திரீகளின் உள்ளம் கவர் கள்வன் ஆனன். அதன் மூலம் ஆயிரக்கணக்கான ஆண்டுகள் தவம் செய்து முனிவர்கள் பெறமுடியாத பேறு, உயர்

நிலை அவர்களுக்கு வாய்த்தது. சாலோக்யம், சாமீப்யம், சாரூப்யம், சாயுஜ்யம் என்று நாம் எப்பொருளை உபாசிக்கிறோமோ அதன் தீவிரத்திற்கு ஏற்ப நாம் அடைகிற நிலைமையை விளக்குவார்கள். தங்கள் உள்ளம் கவர் கள்வனை, மனமோஹனனை, உயிர்க்குயிராக, அவர்கள் பற்றிய பொருள் பெரிய பொருளாகிய கிருஷ்ணனை விட்டபடியால் அவனையே நினைந்து அவனையே அடைந்து அவனிடத்திலேயே வாழ்ந்து அவனது ரூபத்தையே அடைந்து முடிவில் அவனில் கரைந்து விட்டார்கள். அவர்கள் கண்ணனையே அடைந்தார்கள். இந்த யுத்த களத்தில் மாண்ட எண்ணற்ற க்ஷத்திரியர்களைப் பற்றி என்ன சொல்லட்டும்! அவர்களும் கண்ணனது சான்னித்தியத்தால் மோக்ஷமடைந்தனர். என் பிரபுவின் திருவடிகளில் சாஸ்வதமாக என்றென்றும் என் மனது நிலைபெற்று இருக்கட்டும். யுதிஷ்டிரன் நடாத்திய ராஜ சூய யாகத்தில் கூடியிருந்த புகழ்மிக்க நல்ல அரசர்கள் கூட்டமும் முனிவர்கள் திருக்கூட்டமும் என் பிரபுவின் லீலைகளைப் பார்த்துப் பிரமித்துப்போகிறார்கள். பெரு மகிழ்ச்சி அடைகிறார்கள். எனக்கு வாய்த்த அருட்பேறு என்னே! எனது மரணத் தருவாயில் என் பிரபு தனது திவ்விய மங்கள சொரூபத்தில் என் ஸ்தூலக் கண்ணெதிரே திருக்கோலம் காட்டியருளி என்னை ஆட்கொண்டருள்கிறார். நான் பரிபூரணத் திருப்தியுடன் அவர் திருவடிகளில் என்னை ஒப்படைக்கிறேன். பகவான் வாசுதேவர் பிறப்பு இறப்பு அற்றவர். இந்த யுகத்தின் பிதா, ஆத்மா அவரே. ஜீவர்களைச் சிருஷ்டி பண்ணி, தானே அவர்கள் உள்ளத்தில் அந்தர்யாமியாய் இருக்கிறார். ஒரே சூரியன் நாம் அணிந்துள்ள கண்ணடிக்கு ஏற்றவாறு பல்வேறுபட்ட தோற்றங்கள் அளிப்பதுபோன்று மனிதனது மனப்பான்மைக்கு ஏற்றவாறு அவர் பல்வேறு வடிவினராகத் தோன்றுகிறார். என் பிரபுவின் திருவடிகளைப் பற்றிக் கொண்டேன். என் பேதபுத்தி எல்லாம் அகன்றுவிட்டது. என் உலகப்பற்றுக்கள் எல்லாம் அற்றுவிட்டன. எல்லாம் கிருஷ்ண மயம், வாசுதேவமயம். அவனன்றி ஒன்றும் இல்லை. எல்லாம் அவனே."

சூதர் சொன்னார்: முனிவர்களே, மேலே குறிப்பிட்ட வண்ணம் பீஷ்மர் தன் மனம், பேச்சு, பார்வை மூன்றையும், யாரிடத்திலிருந்து தாம் தோன்றி வந்தாரோ அந்த ஸ்ரீகிருஷ்ணன்மேல் ஒன்று கூட்டினார். அதில் மீண்டும் ஒடுங்கிப் போனார். அவர் மூச்சு வெளிவரவில்லை. அது உள்ளேயே நின்றுகொண்டது. பீஷ்மர் என்கிற வடிவத்தில் திகழ்ந்து வந்த ஆத்மா பரமாத்மனில் கலந்து விட்டது. தங்கள் முப்பாட்டனார் இங்ஙனம் பிரம்ம நிர்வாணம் அடைந்ததைக் குறித்து அவர்கள் யாவரும் அமைதியாக, கனத்த மனம் படைத்தவர்களாக ஆனார்கள். தேவர்கள் பீஷ்மர் பேரில் புஷ்பமாரி பெய்தார்கள். தேவகானம் பாடினார்கள். சுற்றிலும் இருந்த பூலோக அரசர்களில் சிறந்தவர்கள் பீஷ்மர் புகழ் பாடினார்கள். இறுதிக் கிரியைகளை யுதிஷ்டிரன் மிக்க வருத்தத்துடன் செய்து முடித்தார். அப்போது ஆங்குக் குழுமியிருந்த முனிவர்களும் ஸ்ரீ கிருஷ்ணன் புகழ் பாடினார்கள். ஸ்ரீ கிருஷ்ண ஸ்மரணையிலேயே யாவரும் பிரிந்து போயினர். ஸ்ரீ கிருஷ்ணனும் யுதிஷ்டிரனும் ஹஸ்தினபுரம் திரும்பிச் சென்று ஆங்குக் காந்தாரியையும் திருதராஷ்டிரனையும் சமாதானப்படுத்தினார்கள்; ஆறுதல் கூறினார்கள். யுதிஷ்டிரன் சிம்மாசனம் ஏறத் திருதராஷ்டிரன் சம்மதம் கொடுத்தார். ஸ்ரீ கிருஷ்ணனும் சம்மதமும் ஆசியும் கூறினார். யுதிஷ்டிரன் அரசனாகித் தம் உத்தமமான முன்னோர்களைப் பின்பற்றி நீதி, நேர்மை, தர்மத்துடன் ராஜ்ய பரிபாலனம் செய்தார்.

**அத்தியாயம் 10**

சௌனகர் கேட்டார்: ஓ, சூதரே, பேராசை, பொருளாசை, தாயாதிப் பகை கொண்ட தீயவர்கள் கூட்டத்தை அழித்த உத்தமனான யுதிஷ்டிரன் இப்பேரழிவைக் குறித்து வருந்தினான். உலக ஆசை, ராஜ சம்பத், போகம், அதிகாரம் ஆகியவைகளில் எந்த ஆசையும் அணுவளவும் இன்றி இருந்தான். உத்தமனான அந்த யுதிஷ்டிரன் தன் சகோதரர்களுடன் கூடி என்ன செய்வதாக எண்ணி இருந்தான்?

சூதர் சொன்னார்: முனி சிரேஷ்டர்களே, இந்த ஜகத்தின் ரக்ஷகனான துஷ்ட நிக்கிரஹ, சிஷ்ட பரிபாலனம் செய்கிறவரான பகவான்

ஸ்ரீ கிருஷ்ணன் பரிக்ஷித்தைக் காத்தார். அதன் மூலம் உத்தமமான குரு பரம்பரை பாதுகாக்கப்பட்டது. அவரே பெரிதும் விரும்பி மகிழ்ந்து யுதிஷ்டிரனை அரசனுக்கினர். இவ்வுலகம் முழுவதும் பெருமானுல் ஆளப்படுகிறது. அவர் கட்டளையை மீற வல்லவர் யாரும் இல்லை. யாராலும் மீற முடியாது. ஜீவன் தன் இச்சைப்படி செயலாற்ற முடியாது. அவன் ஆட்டுவித்த பிரகாரம் இந்த ஜகத் ஆடுகிறது. இந்தக் கடவுள் தத்துவங்களை எல்லாம் பீஷ்மரிடமும் கிருஷ்ணனிடமும் கேட்ட யுதிஷ்டிரன் தெளிவடைந்தான். அவனது தாற்காலிகமான அறியாமை, விசனம், மோஹம், மாயை அகன்றன. இந்தப் பேரழிவிற்குத் தான் காரணம் அல்லன். உற்ளுர் உறவினர்களைக் கொன்றது தான் அல்லன் என்று தெளிவடைந்தான். ஆகவே க்ஷத்திரியக் கடமையை ஏற்றுத் தன் சகோதரர்களுடன் கூடி தேவலோகத்தை இந்திரன் ஆண்டபடி யுதிஷ்டிரன்பூலோக ராஜ்யத்தைப் பரிபாலனம் பண்ணினன். வாழ்வில் எப்பாரும் எங்கணும் தர்மத்தையே கடைப்பிடித்த யுதிஷ்டிரன் அரசாட்சிக்கு வந்ததிலிருந்து மாதம் மும்மாரி பொழிந்தது. பூமி செழித்துத் தானியங்களும், பழவர்க்கங்களும், காய்கறிவகைகளும் ஏராளமாய் விளைந்தன. பசுக்கள் ஏராளமாகப் பாலைப் பொழிந்தன. அவைகளின் மடியினின்று மேய்ச்சல் தரைகளில் பால்சொட்டிக் கிடந்தது. மலைகளும் மரம் செடிகொடிகள் அடர்ந்து நிறைந்து கரும்பச்சையாகத் தோன்றின. செழிப்பின் விளைவாக எல்லாக் காலங்களிலும் எல்லாவகைக் கனிவர்க்கங்களும் கிடைத்தன. அத்யாத்மிகம், (நமக்கு நாமே வருவித்துக் கொண்ட நோய், மனக்கஷ்டங்கள் முதலியன.) ஆதிதெய்விகம், (நம சக்திக்கு அப்பாற்பட்ட யுத்தம், கலகம், சாலை விபத்துக்கள், இரயில், விமான, மின்சார விபத்துக்கள் முதலியன.) ஆதிபௌதிகம் (பஞ்சபூதங்களில் ஆகாயம் தவிர மற்றவைகளால் ஏற்படும் துன்பங்களான வெள்ளம், பூகம்பம், காட்டுத் தீ, புயல், எரிமலை போன்றவை.) என்கிற மூவகைத் துன்பங்களில் எதுவும் மக்களுக்கு உண்டாகவில்லை. அரசன் எவ்வழியோ அவ்வழியில் மக்கள் என்பார்கள். தர்மதேவதையின் புதல்வன் தர்மராஜா யுதிஷ்டிரனது ஆட்சியில் மக்களும் சீலத்துடனும் சன்மார்க்கத்திலும் வாழ்ந்தார்கள்.

துயரத்தில் மூழ்கிக்கிடந்த நண்பர்களுக்கும் உற்ளுர்களுக்கும் ஆறுதல் அளித்தல் பொருட்டும் தன் அன்புச் சகோதரியாகிய சுபத்திரையின் வேண்டுகோளின்படியும் ஸ்ரீ கிருஷ்ணன் ஹஸ்தினபுரத்தில் சில மாதங்கள் தங்கினர். பிறகு யுதிஷ்டிரனுடைய சம்மதம் பெற்றுக்கொண்டு அந்தத் தர்மிஷ்டனையும் அன்புடன் ஆரத் தழுவி விடைபெற்றுக்கொண்டு துவாரகை செல்லப் பகவான் தம் ரதத்தில் ஏறினர். அப்போது சிலர் அவரைக் கட்டித் தழுவினர், சிலர் வணக்கம் செலுத்தினர், சிலர்மரியாதை செலுத்தினர். தௌம்யர், திருதராஷ்டிரன், கிருபர், நகுலன், சகதேவன், பீமன், யுயுத்சு, (திருதராஷ்டிரனுக்கும் ஒருவைசியமாதுவுக்கும் பிறந்தவன்) சுபத்திரை, திரௌபதி, குந்தி, உத்தரை, சத்தியவதி மற்றும் பலர் ஸ்ரீ கிருஷ்ணன் பிரிவைத் தாங்கமாட்டாதவர்களாய் மூர்ச்சை அடைந்தனர். கற்றவர்கள், அறிவுடையவர்கள் பகவான் ஸ்ரீ கிருஷ்ணனின் பெருமையையும் மகிமையையும் பக்தர்கள், முனிவர்களிடமிருந்து அறிந்துகொண்டமையினுல் அவர்கள் மனைவி மக்கள், உலகப் பொருள்களிடத்துப் பற்றுதல் நீங்கினவர்களாகிக் கடவுள் பக்தியையும் சாது சங்கத்தையும் பெரிதும் விரும்பினர்கள். ஸ்ரீ கிருஷ்ணனுடனேயே வாழ்ந்து, பழகி, வணங்கி, தழுவி, உறவுகொண்டு, பேசி, ஒன்ருகச் சாப்பிட்டு, ஒன்ருகப் படுத்துறங்கி நெடுநாள் பழகிவிட்டமையால் அவர்கள் கண்ணனைப் பிரிதல் என்பது தங்கள் உடலினின்று உயிர் பிரிவது போன்று உணர்ந்தார்கள். அவர்களுடைய பிரிவுத் துயரம் மிகப் பெரியதாய் இருந்தது. வாசுதேவன் தங்களை விட்டுப் பிரியப் போவதை அறிந்துஅவரையே பேரார்வத்துடன் பார்த்து நின்ருர்கள். தங்களை மறந்து அவரவர் தம் தம் இடத்திலேயே ஸ்தாவரம் போன்று நின்றனர். திடீரென்று ஸ்ரீகிருஷ்ணனுக்கு வழிபாடு செய்யவேண்டும் என்று சிலர் அவருக்குகந்த நிவேதனப் பொருள்களையும் வழிபாட்டுப் பொருள்களையும் கொண்டுவரச் சென்றனர்.

# ஸத் ஸம்பாஷணை

கேள்வி: (369) பக்தி, தொண்டு இரண்டுக்குமுள்ள வேறுபாடு என்ன? இரண்டிலும் மனிதன் பின்பற்றச் சிறந்தது எது?

கோயிலைத் துப்புரவுபடுத்துவது தொண்டு. மனிதனோடு மனிதன் அன்புடன் வைக்கின்ற நல்லிணக்கத்தைத் தெய்வத்திடம் திருப்புவது பக்தி.

இனி, பக்திக்கும் தொண்டுக்கும் இடையில் முரண்பாடு இல்லை. தாய் தன் குழந்தையினிடத்து வைக்கும் அன்பைப் பணிவிடையின் வாயிலாக விளக்குகின்றாள். உலகெங்கும் உயிர்களுக்கிடையில் நாம் காணும் காட்சி இதுவேயாம். தாய்ப்பறவை உணவு தேடிப் புசித்துப் பாதி ஜீரணம் பண்ணிக் குஞ்சின் அலகில் ஊட்டுகிறது. அது அன்புக்கு அறிகுறியாம். தெய்வத்துக்குப் பணிவிடை புரியும் தொண்டர்களை அன்பர்கள் என்கிறோம். தெய்வத்தினிடத்தும் அன்பர்களிடத்தும் அவர்கள் கொண்டுள்ள அன்பைத் தொண்டின் வாயிலாகத் தெரிவிக்கின்றனர். அன்பு ஓங்குதற்கேற்பச் சலித்துப் போகாது தொண்டு புரியும் வல்லமை தொண்டனுக்கு வந்தமைகிறது. தொண்டன் புரிகிற தொண்டின் வாயிலாக அவனுடைய அன்பு மேலும் மேலும் வளர்கிறது. இதுவே தொண்டுக்கும் பக்திக்கும் இடையிலுள்ள இணக்கமாம். தொண்டர்களெல்லாரும் பரமபக்தர்களாகவும் பக்தர்கள் நல்ல தொண்டர்களாகவும் திகழ்கின்றார்கள்.

கேள்வி : (370) இந்து சமயத்தில் கிறிஸ்தவர் முறை போன்று ஒன்றிய தொழுகை முறையை ஏற்படுத்த முடியாதா? அவ்வாறான இறை வழிபாடு நம்மிடையே ஒரு கட்டுக்கோப்பான உணர்வினை உண்டாக்கும் அல்லவா?

கிறிஸ்தவர்கள் கையாண்டு வருகிற ஐக்கிய வணக்கத்தில் பாராட்டத்தக்க பகுதி உண்டு. அதில் உள்ள தகாத பகுதியைக் குறித்து விவேகானந்த சுவாமிகள் இங்ஙனம் பகர்கிறார்: "இப்பொழுது எல்லாரும் முழந்தாளிடுங்கள்; தெய்வ வழிபாடு பண்ணுங்கள்." இது போன்ற பட்டாளத்துக்கு இடுகிற ஆணை (Regimentation) கடவுள் வழிபாட்டுக்கு உதவாது. அவரவர் விருப்பப்படி உணவு உண்பது போன்று கடவுள் வழிபாடும் அவரவர் மனப்பான்மைக்கு ஏற்ற பிரகாரம் நிகழவேண்டும். பட்டாள அணிவகுப்பு அதற்கு உதவாது.

இனி, ஐக்கிய வழிபாடென்பது ஒன்று இந்து சமயத்தில் பல்லாயிரம் ஆண்டுகளாக நிகழ்ந்து வந்திருக்கின்றது. குறிப்பிட்ட நல்ல நேரத்தில் ஆயிரக்கணக்கான பேர் ஏககாலத்தில் இறைவனுடைய நாமத்தை உச்சரித்துக்கொண்டு புண்ணிய தீர்த்தமாடுவதாகும் அது. திருவண்ணாமலை போன்ற புண்ணிய ஸ்தலத்தில் லட்சக்கணக்கான பேர் கூடி 'சங்கர மஹாதேவா' என்று கூவிக்கொண்டு தீப தரிசனம் பண்ணுவது எல்லார் உள்ளத்தையும் தொடக்கூடிய கவர்ச்சிகரமான நிகழ்ச்சி ஆகும். கிறிஸ்தவ தேவாலயத்தில் நடைபெறுகிற வழிபாட்டில் தலைவர் பட்டாளத்துக்கு ஆணையிடுவதைப் போன்று 'முழந்தாளிடுங்கள், கும்பிடுங்கள்' என்று சொல்லுதல் நம் வழிபாட்டில் தேவையே இல்லை. அவரவர் மனது அவரவர் விருப்பத்திற்கு ஏற்ப நல்ல நேரத்தில் கடவுளை நாடிப் போகிறது. அதே வேளையில் ஆயிரக்கணக்கான பேர் ஒன்று கூடி ஏக காலத்தில் ஒருமை மனதாக வழிபாடு செய்யும்பொழுது எல்லார் உள்ளத்துக்கும் திருப்தியையும் ஆனந்தத்தையும் தரவல்ல நிகழ்ச்சியாக அது அமைகிறது. இந்நிகழ்ச்சியில் தலைவர் ஒருவர் இருந்துகொண்டு 'இப்பொழுது கண்ணை மூடுங்கள், தியானம் பண்ணுங்கள்' என்று ஆணையிடுதல் பட்டாள அணிவகுப்புக்கு நிகராகும். அத்தகைய முறையை நாம் கையாளலாகாது. ஆயினும்கிட்டத்தட்டகிறிஸ்தவர்கள்கையாளுகிறமுறையை அனுசரித்து நவீனமுறையில் நடாத்தும் அந்தர்யோகம் என்னும் ஆன்மீகப் பயிற்சி பட்டாள அணிவகுப்புபோன்று தென்படுகிறது. பழைய பண்பிலும் அவரவர் மனதுக்கேற்ற வழிபாட்டு முறையிலும் வழிபடுவது அந்தர்யோகத்தில் இடம் பெறுகிறது. இம்முறையில் நூற்றுக்கணக்கான பேர் அமர்ந்துகொண்டு இறைவனுடைய நாமத்தை உச்சரிப்பதும் தியானம் பண்ணுவதும் அர்ச்சனை செய்

வதும் கடவுளின் மகிமைகளைக் காது கொடுத்துக் கேட்பதும் பக்தியை வளர்க்கும். ஆகையினால் கிறிஸ்தவர்கள் கையாளுகிற முறை போன்று அல்லாது நம் போக்கில் நம் பண்புக்கும் பக்திக்கும் ஏற்ப அந்தர்யோகம் நடாத்துவது சாலச் சிறந்த புதிய வழிபாட்டு முறையாகும்.

**கேள்வி : (371)** ***தர்ம சக்கரம் அட்டையில் உள்ள சிவபெருமானின் மேல் பாதம் பதித்த காளி தேவியின் படத்திற்குப் பொருள் என்ன?***

அம்பிகையின் திருப்பாதம் சிவனர் நெஞ்சின்மீது படிவது பொருந்தாதது போன்று தென்படுகின்றது. மனித நிலையில் வைத்து ஆராயுமிடத்து மக்களாகிய நாம் கைக்குத் தருகிற மதிப்பைக் காலுக்குத் தருவதில்லை. பரவஸ்துவினிடத்து அத்தகைய பாகுபாடு கிடையாது. அன்னை பராசக்தி பிரபஞ்சமாக இலங்குகின்றாள். ஆகையினால் அசைவு என்பது அம்பிகைக்குச் சொந்தம். அசைகின்ற பொருள் ஒன்றுக்கு அசையாத பொருள் ஆதாரமாக அமைதல் அவசியம். ஓடுகிற வண்டிக்கு ஓடாத பூமி ஆதாரம். வீசுகிற காற்றுக்கு அசையாதிருக்கும் ஆகாசம் ஆதாரம். அதே பாங்கில் இயங்குகின்ற சக்திக்கு இயங்காதிருக்கும் சிவனர் ஆதாரம். இதற்கு விளக்கமாகத் தேவியின் திருநடனம் போக்குவரவற்ற பரம்பொருளாகிய சிவனருடைய நெஞ்சின்மீது நிகழ்கிறது என்பது முற்றிலும் பொருத்தமானதே.

**கேள்வி: (372)** ***பெண்கள் மசூதிக்குச் செல்லக்கூடாது என இஸ்லாம் சமயம் தடை செய்கிறது. ஐயப்பன் கோவிலுக்குப் பெண்கள் செல்லலாகாது என இந்துமதம் தடை செய்வது முறையா? குருவாயூரப்பன் கோவிலுக்குள் சட்டையை நீக்கிவிட்டுத்தான் செல்லவேண்டும் என்று சொல்வது ஏன்?***

ஆத்மா ஆணன்று, பெண்ணன்று, அலியுமன்று. ஆத்மா பிரபஞ்சத்துக்கு அப்பாற்பட்டது. பிரபஞ்சத்தில் உருவான சரீர அமைப்பில் ஆண், பெண், அலி என்னும் பேதம் உண்டு. வழிபாட்டில் பெண்பாலர் ஆண்பாலருக்குச் சமம் என்னும் இந்துமதக் கோட்பாடு அர்த்தநாரீசுவரத் தத்துவத்தில் வந்து அமைந்திருக்கிறது. கணவன் ஒருவன் தன் மனைவியைப் புறக்கணித்துவிட்டு வழிபாடு போன்ற ஸத்கர்மம் எதுவும் செய்யலாகாது என்பது இந்துமதக் கொள்கை. இக்கொள்கையினின்று ஒருபொழுதும் நாம் பிசகலாகாது.

ஐயப்பன் ஆலயத்தினுள் இன்னும் புஷ்பவதியாகாத சிறுமிகளும் கிழவிமார்களும் செல்வதற்கு அனுமதி உண்டு. இடைநிலையில் உள்ள பெண்கள் இக்கோவிலுக்கு வரலாகாது என்னும் கட்டுப்பாடு மாதம் ஒருமுறை அவர்கள் வீட்டுக்குப் புறம்பாக இருக்கும் நிலையை அனுசரித்து வந்துள்ள கட்டுப்பாடாகும்.

குருவாயூரப்பன் கோவிலுக்குள் சட்டை போட்டுக்கொண்டு போகலாகாது என்பது லோகாச்சாரம். அதாவது அந்தந்த மாகாணத்துக்குரிய பழக்க வழக்கங்களை அடிப்படையாகக் கொண்டதாம்.

பக்தியை வளர்ப்பதும் மக்களுக்கிடையில் ஒற்றுமையைக் கொண்டுவருவதும் யாண்டும் நம்மேலான நோக்கமாய் இருக்கவேண்டும்.

**கேள்வி: (373)** ***தம் ஒரே மகன் திருமணம் செய்துகொள்ள வேண்டுமெனத் தூண்டும் பெற்றோர்களுக்கு உதவியாக இல்லாமல் துறவு பூணுவது இயலுமா?***

துறவு பூணுவது கிட்டத்தட்ட மரணத்துக்கு ஒப்பாகிறது. துறவி ஒருவன் இவ்வுலக சம்பந்தமான இன்பம் எதுவும் வேண்டாம் என்று ஒதுக்கித்தள்ளுகிறான். இவ்வுலக சம்பந்தமான இன்ப துன்பம் எதிலும் அவன் கலந்து கொள்ளுதல் இல்லை. அந்நிலையில் இவ்வுலக வாழ்க்கைக்குத் துறவி ஒருவன் செத்துப்போனவனுக்கு நிகராகிறான்.

இனி, மரணம் எந்த வேளையிலும் யாரை வேண்டுமானாலும் வந்து தாக்கலாம். பெற்றோருக்கு இருக்கிற ஒரே மகன் என்று கருதி மரணம் ஒருவனை விட்டுவைப்பதில்லை. அதே பாங்கில் தீவிர வைராக்கியம் படைத்துள்ள சாதகன் ஒருவன் தன்னையும் தன் உற்றார் உறவினர்களையும் மாண்டுபோனவர்களாகவே கருதுகிறான். அத்தகைய எண்ணத்தை அவனுடைய உள்ளத்தினின்று யாரும் அகற்ற முடியாது. இவ்வுலக சம்பந்தமான நெருக்கடிகளைச் சிறிதும் பொருட்படுத்தாமல் தீவிரமானவைராக்கியமுடைய சாதகன் சந்நியாசத்தை நாடிப் போகிறான். அத்தகையவனுடைய போக்கைத் தடைசெய்ய யாருக்குமே இயலாது.

# சனாதன தர்மத்தின் சிறப்புகள்

( திரு. V. S. நரசிம்மன் )

நாம் உணரவேண்டிய ஒரு கருத்தை ஆராயலாம். உலகம் ஒரு பயிற்சிக்களம். உலகில் நன்மையும் தீமையும் கலந்தே இருக்கின்றன. இங்குத் தீமையை அறவே ஒழிக்க இயலாது. குறிப்பிட்ட ஒரு செயல் இருவேறு கோணங்களில் ஆராயப்பட்டால், அதுவே நன்மையாகவும் தீமையாகவும் காணப்படும். நன்மையும் தீமையும் ஒரே நிகழ்ச்சியின் இரண்டு தோற்றங்கள் எனலாம். இதன்மூலம் சாங்கியம் தரும் எச்சரிக்கை யாது? ‘உலக விவகாரத்தில் வரம்பு மீறி ஈடுபடக்கூடாது; உலகை ஆராயும் தோறும், வியக்கத்தக்க அதிசயங்களைக் காணலாம். ஆனால் நம் இலட்சியம் அது அன்று. ‘தேவையான அளவு உலகைப் பயன்படுத்தி உன்னை மேம்படுத்திக் கொள்’ என்பது அது தரும் சிறந்த பாடம்.

புருஷன் (சேதனம்) பிரகிருதி (அசேதனம்) என்று இரண்டு அடிப்படைத் தத்துவங்களைப் பற்றிச் சாங்கியம் விளக்குகின்றது. அசேதனத்தில் ஊடுருவிச் சேதனம் உள்ளது. பிரகிருதியின்மீது புருஷன் தன் ஆட்சியைச் செலுத்துகின்றது. நம் சரீரத்துடன் இந்தத் தத்துவத்தை ஒப்பிடலாம். சரீரம் அசேதனம்; சரீரி (சரீரத்தை உடைய ஜீவன்) சேதனம். ஜீவன் சரீரத்தைத் தன் வசத்திற்கு உட்படுத்தி ஆள்கின்றான். பிண்டத்தில் பொருந்தும் கொள்கை அண்டத்திலும் பொருத்தமானதே. பகவத் கீதையில் ஸ்ரீ கிருஷ்ணன் கூறுகின்றார்:

இதம் சரீரம் கௌந்தேய க்ஷேத்ரமிதி
அபிதீயதே
ஏதத் யோ வேத்தி தம் ப்ராஹு:
க்ஷேத்ரக்ஞ இதி தத்வித:

“இந்தச் சரீரத்தை க்ஷேத்திரம் என்று அறிந்துகொள்; ‘இதை யார் நன்கு அறிகின்றானோ அவனே க்ஷேத்ரக்ஞன்’ என்று உண்மையை அறிந்தவர்கள் கூறுகின்றனர்.”

க்ஷேத்ரம்-க்ஷேத்ரக்ஞன் என்பது பிரகிருதி-புருஷன் என்று ஒப்பிட்டு நோக்கக் கூடியது ஆகிறது.

**யோக தரிசனம்**

“யோக: சித்த விருத்தி நிரோத:” யோகம் என்பது எண்ணங்களின் அசைவைக் கட்டுப்படுத்துவது. (பதஞ்சலி யோக சூத்திரம்) இதயத்திலே குடிகொண்டிருக்கும் சைதன்ய சொரூபத்தை உணர்ந்து, மனதை அடக்கி, தெய்வீக உணர்வில் திளைத்திருப்பது யோகம். யோக நெறியில் ஒரு விசேஷ அம்சம் உள்ளது. இதில் இறைவனைப் பற்றிய பேச்சு எழுவதில்லை. கட்டுப்பாடு, நல்ல ஒழுக்க நெறியைப் பின்பற்றினால் எத்தகைய உயர்நிலைக்குச் சாதாரண மனிதன் செல்ல முடியும் என்பதே இதில் பேசப்படுகின்றது. வேற்றுமை யாதுமின்றி அனைவரும் நடந்து செல்லும் ராஜபாட்டையைப் போல் இந்நெறி உள்ளதால் ‘ராஜ யோகம்’ என்றும் குறிப்பிடுவர்.

பரிணாமவளர்ச்சியில் மனிதன் பெரியநிலையில் இருக்கின்றான். தாவரங்களில் துவங்கி விலங்குகளாக, மனிதனைப் பரிணமிக்கும்போது சரீரத்தில் பரிபூரண நிலை வந்து விடுகின்றது. Impulse, Instinct, Intellect என்று உணர்ச்சியிலும் படித்தரம் காணப்படும். இதற்குப் பின் நல்லொழுக்கத்தில், தெய்வீகத்தில் பரிணாமம் அடையவேண்டும். யோகப்பயிற்சியால் அடையும் உயரிய நிலையை Intuition, ஞானக்கண் என்று குறிப்பிடுவார்கள்.

**வேதாந்த தரிசனம்**

‘பிரக்ஞானம் ப்ரஹ்மம்’ என்று ஒரு வாக்கியத்தில் வேதாந்தம் விளக்கப்படுகின்றது. அகண்ட பேரானந்த மெய்ப்பொருள் தன்னைச் சரீரத்தில் விளக்குகின்றது. அது ஏழு ஞான பூமிகளில் மிளிர்கின்றது; ஐம்புலன்களுக்குப் புலப்படும் வண்ணம் தோன்றுகின்றது. சூரியனின் ஒளிக்கதிர் ஏழு நிறங்களாகப் பிரிவதைக் காண்கிறோம்; ஏழு ஸ்வரங்கள் ‘ஓசை’யின் பிரிவுகளாம்; ஏழு சுவைகளும் அவ்வாறே. அப்படியே மெய்ப்பொருளும் ஏழு ஞானபூமிகளில் வெளிப்படுகின்றது. தோற்றத்திற்கு அப்பாற்பட்ட நிலையில் இருந்து (அவ்யக்தம்) தோற்றத்திற்கு வரும்போது (வ்யக்தம்) இத்தகைய நிலைகள் காணப்படுகின்றன. இதற்கு இசைவாக ஏழு ரிஷிகளையும் நாம் போற்றுகின்றோம். ஸப்த ஸ்வரம், ஸப்த வர்ணம்,

ஸப்த பூமி, ஸப்த ரிஷி என்று ஏழு என்ற எண் முக்கியத்துவம் பெறுகின்றது.

சகுணப் பிரம்ம உபாசனையில் பண்படும்போது யோகி ஞானத்தில் முன்னேறி, இரண்டறக் கலக்கும் ஐக்கிய நிலையை அடைகின்றான். தனது தனி வ்யக்தியைக் கலைத்து விட்டுப் பரிபூரண போதத்தில் ஒன்றித்து விடுகின்றான். கால தேச, காரண காரிய நிலைகளைத் தாண்டிய மெய்ப்பொருளே உலகாகக் காட்சி அளிக்கின்றது. இந்தத் தோற்றத்தின் பின் உள்ள சொரூபத்தை உணர்த்துவது வேதாந்தம். 'ப்ரக்ஞானம் ப்ரஹ்மம்—பரிபூரணப் பிரம்மமே மெய்யுணர்வு' என்று தத்துவம் இயம்பும்.

**இதிகாசம்**

நம்முடைய வேத நெறியை 'ஸத்யம் வத தர்மம் சர-உண்மையைப் பேசு, தர்மத்தின் படி நட' என்று இரண்டு சொற்றொடர்களில் அடக்கி விடலாம்.

'தர்மம்' என்ற ஸம்ஸ்க்ருதச் சொல்லை மொழி பெயர்க்க இயலாது. நீரின் தர்மம் நனைப்பது, நெருப்பின் தர்மம் சுடுவது—என்று ஐந்து பூதங்களுக்கும் தனித்தனி தர்மம் உண்டு. ஜடப்பொருள்களுக்கும், மற்ற உயிரினங்களுக்கும் குறிப்பிட்ட தர்மம் காணப்படும். மனித நிலையில் தர்மம் சிக்கல்கள் உடையதாகக் காணப்படும். மிகவும் நுணுக்கமான எலக்ட்ரானிக் கருவிகள், கம்ப்யூட்டர் போன்று, பல நுணுக்கமான முறைகளில் தர்மம் விளக்கப்படுகின்றது. குழப்பமான, சிக்கலான நிலையில் தனது தர்மம் யாது என்று அறியாதபோது மனிதன் என்ன செய்ய வேண்டும்? தார்மீக வாழ்க்கையில் நிலைபெற்ற சான்றோரைத் தனக்கு முன்மாதிரியாகக் கொள்ளவேண்டும். (ஒப்பிடுக: தைத்திரீய உபநிஷத், சிக்ஷாவல்லி *11.4*). மேலும் தர்மத்தைப் பற்றிய பல சந்தேகங்களுக்கும் விடையை இராமாயண, மகாபாரத இதிகாசங்களில் காணலாம். இதிகாச புருஷர்களாகிய தர்மாத்மாக்களின் வாழ்க்கை முறையை ஆராய்வது சிறந்த பலனைத் தரும்.

**இராமாயண, மஹாபாரதங்களின் சிறப்பு:**

தர்மம், அதர்மம் இரண்டிற்கும் இடையே நிகழும் போராட்டத்தையும், இறுதியில் தர்மமே வெல்லும் என்ற நித்திய சத்தியத்தையும் இவை சித்தரிக்கின்றன. நன்மையும், தீமையும் கலந்ததே வாழ்வு. எங்கும் என்றும் இதுவே நடைமுறை ஆகும். தீமையை அழிப்பதற்காகத் தர்மத்தைக் கடைப்பிடிக்கவேண்டும். அன்றாட வாழ்க்கையில் எவ்வளவு சிறப்புடன், நேர்மையுடன் குறைவற்ற தார்மீக வாழ்வு வாழமுடியும் என்று அற்புதமான பாத்திரப் படைப்புக்களின் மூலம் இதிகாசம் விளக்குகின்றது. 'தரிசனங்கள்' தத்துவக் கருவூலங்கள். அக்கருத்துக்களின் புறவடிவவாக, இதிகாச பாத்திரங்களின் வாழ்க்கை அமைகின்றது எனலாம். (A concrete shape is thus given to abstract principles.)

இராமாயணத்தின் நாயகன் ஸ்ரீ ராமன் ஆதர்ச புருஷன். நாயகி ஸ்ரீ சீதாதேவி பெண்ணினம் போற்றும் படைப்பு. ஸ்ரீ ஆஞ்சநேயர் குரு சொரூபமாகத்திகழ்ந்து, ஆசிரியர்களுக்கு இலக்கணமாக விளங்குகிறார். பத்துத் தலைகளுடன் தீமையே உருவெடுத்து வந்தவன் இராவணன். ஐந்து ஞான இந்திரியங்கள், ஐந்து கர்ம இந்திரியங்களுடன், பண்பாடு பெறாத தீயமனமே இராவணன் என்று உருவகப்படுத்தப்படுகின்றது.

பரமாத்மாவாகிய ஸ்ரீ ராமனிடமிருந்து, ஜீவாத்மாவாகிய சீதையை அக்ஞானம் என்ற இராவணன் பிரித்துச் சிறையில் வைக்கின்றது. ஜீவாத்மா இந்தப் பிரிவைத் தாளாது, பிரார்த்தனையும் தவமும் புரிகின்றது. ஆஞ்சநேயன் வடிவில் குரு வந்து இணக்கம் ஏற்பட வழி செய்கின்றார். இவ்வாறு வேதாந்தக் கண்ணோட்டத்துடன் இராமாயணத்தைப் படிக்க வேண்டும்.

இலட்சிய வாழ்வு மிக அற்புதமாக இக்காவியத்தில் சித்தரிக்கப்படுகின்றது. ஸ்ரீராமன் மனிதர்களில் சிறந்தவன், நரோத்தமன்; இலட்சிய மனிதன், இலட்சிய மகன், இலட்சிய சகோதரன், இலட்சியக் கணவன், இலட்சிய நண்பன், இலட்சிய அரசன் என்று வாழ்க்கையின் அனைத்துப் படித்தரங்களிலும் மிளிர்கின்றார். ஏனைய பாத்திரங்களும் தத்தம் சிறப்போடு இலங்குவதைக் காணலாம். தத்துவத்தை வாழ்க்கை வரலாற்றின் மூலம் விளக்குவது இதிகாசம். இராமாயணமும், மஹாபாரதமும் இதிகாசங்களாகின்றன.

---

# மகிஷாசுரமர்த்தனி

( சிறு தொடர் கதை )

( சிவத்தொண்டன் )

[ 320ஆம் பக்கத் தொடர்ச்சி ]

" கடத்தல் கூட்டத்தினர் இரவில் கொன்று சாப்பிடுவதற்காக ஓர் ஆட்டைக்கொட்டடியின் ஓரத்தில் கட்டிப் போட்டிருந்தனர். அந்த ஆடு கத்திக்கொண்டிருந்தது. பதினெட்டு அடி நீள முள்ள ஒரு மலைப்பாம்பு அந்த ஆட்டின் குரலைக் கேட்டு ஓலைக்கூரையின் பிய்ந்துபோன ஓட்டை வழியாக உள்ளே தன் உடலை நீட்டியது. சட்டென்று அதன் நடுப்பாகத்தில் பாய்ந்து ஏறிப் பாம்பு என்னை வளைப்பதற்குள் கூரையில் குதித்து அங்கிருந்து கீழே தாவினேன். பிறகு சுற்றி வந்து கதவைத் திறந்தவுடன் அந்த ஆட்டுக்குட்டியும் தப்பித்து ஓடியது. நான் தட்டுத் தடுமாறிக்கொண்டே ஊருக்குச் செல்லும் சாலைக்கு வந்து சேர்ந்தேன். அப்பொழுதுதான் திருவிழாவில் நடந்த குழப்பங்களையும் பார்த்து உங்களையும் கண்டேன்" என்று தன் அனுபவங்களைச் சொல்லி முடித்தான் ஆத்மன். "அம்மா, உன்னுடைய கருணைக்கு அளவு ஏது? உன்னுடைய லீலைகளை யாரால்தான் (காரணகாரியங்களோடு) புரிந்து கொள்ள இயலும்?" என்று கூறி மௌனத்தில் ஆழ்ந்தார் சிவனடி.

முற்காலத்தில் மதியிழந்து வெறியாட்டம் போட்ட மகிஷனை மாய்த்த அந்த மர்த்தனியாகிய பராசக்தி இன்று தீயவன் அந்தகனுக்குப் பாடம் கற்பித்து அவனைத் திருத்தினாள் என்ற மெய்யுணர்வினால் விதிர்விதிர்த்துப் போனார் சிவனடி. வினைக்கேற்ற விளைவைத் தருவதில் அன்னை பராசக்தி யாண்டும் தவறமாட்டாள். இந்த எண்ண அலையில் அவர் மூழ்கி இருந்தபொழுது அவருடைய மூன்றாவது மகள் மலையரசி பதட்டத்துடன் அறைக்குள் நுழைந்தாள். அவள் கதறும் குரலில் "அப்பா, இந்தக் கடிதத்தைப் படித்துப் பாருங்கள்" என்று சொல்லிக்கொண்டே ஒரு தாளை நீட்டினாள்.

தம் செல்வப்புதல்வியின் கண்களில் என்றுமில்லாமல் இன்று கண்ணீரைக் கண்டதும் பதறிப்போனார் சிவனடி. "என்னம்மா, ஏன் அழுகிறாய்? இது என்ன காகிதம்?" என்று கேட்டபடி அந்தத் தாளை வாங்கிப் பார்த்தார். அவருடைய தங்கை மகன் திக்கன் என்பவன் தான் அந்தக் கடிதத்தை எழுதியிருந்தான். தான் மிகப்பெரிய பணக்காரன் என்ற ஆணவமும், தன் இச்சைகளைத் தான் எவ்விதத்திலும் நிறைவேற்றிக் கொள்பவன் என்ற அகம்பாவமும் அக்கடிதத்திலிருந்த வார்த்தைகளில் விரவிக்கிடந்தன. "நீ M. B., B. S., படித்துக் குப்பை கொட்டியது போதும். நான் இரண்டொரு மாதங்களில் அயல்நாடு சென்று அங்கேயே தங்க விரும்புவதால், உடனே நம் திருமணத்துக்கு ஏற்பாடு செய்யும்படி உன் தகப்பனுக்குச் சொல். என் பேச்சை மீறினால் நான் எப்பேர்ப்பட்ட முரடன் என்பதை உன் வீட்டினர் சீக்கிரமே புரிந்துகொள்வார்கள்" என்று எச்சரித்திருந்தான். இரண்டு வாரங்களுக்கு முன்பு சிவனடியின் ஊருக்கு வந்திருந்த திக்கனின் நண்பன் ஒருவன், அவர் வீட்டில் வந்து தங்கியிருந்து தன்னுடைய தகாத காரியங்களை நடத்திக்கொள்ள முயன்றான். அவனுடைய தோற்றத்தையும், பேச்சையும் பார்த்தால் திக்கனுக்கு ஏற்ற தோழனாகவே தோன்றினான். மறுபேச்சுப் பேசாமல் அவனை வாசலிலிருந்து விரட்டிவிட்டனர் சிவனடியின் குடும்பத்தினர். இப்பொழுது திக்கன் அச் சம்பவத்தைக் குறித்துக் கடிதத்தில் எழுதியிருந்த சொற்கள் மிகவும் கீழ்த்தரமாக இருந்தன.

பண்பட்ட குடும்பத்துப் பெண்ணான மலையரசிக்கு இந்த அநாகரிகம் பெரும் அதிர்ச்சியைத் தந்தது. தனக்கு இப்படிப்பட்ட ஒருவன் நெருங்கிய உறவினனாக வந்து வாய்க்க வேண்டுமா என்று ஏங்கினாள். அதிலும் அக்கயவன் தன்னை அடிமைப்படுத்துவதில் வெறியனாக இருக்கிறான் என்ற எண்ணமே அவளுக்கு நடுக்கத்தை உண்டுபண்ணியது. தன் கல்லூரிக்கே குண்டர்களோடு வந்து தன் படிப்புக்கு ஊறு செய்யப் போவதாக அவன் எழுதியிருந்ததைப் படித்துவிட்டுப் பதறிப்

போய்த்தான் தன் தந்தையிடம் வந்து முறை யிட்டாள் மலையரசி.

கடிதத்தைப் படித்த சிவனடி ஒரு கணம் நெட்டுயிர்த்தார். 'உடன் பிறந்தே கொல்லும் வியாதி' என்ற முதுமொழியை நினைத்துப் பார்த்தார். கிளியை வளர்த்துப் பூனையிடம் கொடுத்ததைப் போலத் தம் வீட்டில் அருமை யாக வளர்த்த தம் தங்கையைத் தீர விசாரி யாமல் அந்தப் பெரிய மேட்டுக் குடும்பத்தில் சம்பந்தம் செய்ததும், காலமெல்லாம் அவள் தீராத நோயில் அவதிப்பட்டதும், சாகும் தறுவாயில், "அண்ணு, என் பிள்ளைகளை ஒழுங்காக வளர்க்கத் தெம்பில்லாமல் போயிற்று. அவர்களிடம் என்ன குற்றங் குறை இருந்தாலும் நீ பொறுத்துக்கொண்டு அவர்களை அணைத்து ஆதரவு தரவேண்டும்" என்று தம்மிடம் உருக்கமாக வேண்டிக் கொண்டதும் அவர் நினைவலைகளில் முட்டி மோதின.

தம்முடைய சித்தத்தைத் திடப்படுத்திக் கொண்டார் சிவனடி. மகளை வற்புறுத்தித் தமக்கு அருகில் இருந்த இருக்கையில் உட்கார வைத்தார். "அம்மா, இவ்வளவு தானு உன் சாமர்த்தியம்? கேவலம் ஒரு பொறுப்பில்லாத வனின் மிரட்டலுக்குப் பயந்து போய் அழும் அளவுக்கு நீ ஒரு கோழையாக இருக்கிருயே? உன்னை மீறி அவன் உன்னை என்ன செய்து விட முடியும்? மனத்தில் தைரியம் உள்ள வனுக்கு ஆயுளில் ஒருமுறைதான் சாவு; பயந் தாங்கொள்ளிகள் ஒவ்வொரு நிமிஷமும் செத் துச் செத்துப் பிழைக்கிருர்கள் என்பதை நீ மறந்து விட்டாயா? உனக்குத் துணையாக நாங்கள் இவ்வளவு பேர்கள் இருக்கும்பொழு துமா நீ உன் தன்னம்பிக்கையை இழக்க வேண்டும்? உன் போன்றவர்களெல்லாரும் M. B.,B.S., படித்துத்தேறித் தொழிலில் இறங் கிஞல் நோயாளிகளின் கதி என்ன ஆவது? 'வயிரமுடைய நெஞ்சு வேண்டும், இது வாழும் முறைமையடி பாப்பா' என்ற பாரதியின் மொழி கூடவா உனக்கு மறந்து போயிற்று?" என்று சரமாரியாகப் பொழிந்து தள்ளினர்.

இவ்வார்த்தைகளைக் கேட்டதும் தலையும், நெஞ்சம் நிமிர்ந்தன மலையரசிக்கு. தன் கண் களைத் துடைத்துக் கொண்டாள். ஈரம் கசியும் குரலில், "பாருங்கள் அப்பா, முறையல்லாத வழிகளில் அவர் என்னை மிரட்டினுல் கல்லூரி யில் என் பெயர் தானே கெட்டுப் போகும். நேற்றுக்கூட ஒரு பெண்ணைப்பற்றிக் கல்லூரி யில் சிலர் இப்படித்தான் வம்பு பேசிக்கொண் டிருந்தார்கள். பழி ஒரு பக்கம், பாவம் ஒரு பக்கம் என்று அப்பாவிப்பெண்களை இப்படி வதைக்கிருர்களே பாவிகள். இவர் ஏன் எனக் குக் கடிதம் எழுதுகிருர்? இது என்ன அநி யாயம்?" என்று படபடத்த தம் மகளைப் பார்த்து மெல்லிய புன்னகை பூத்தார் சிவனடி. "மலையரசி, முயலகன் இல்லாத நடராஜர் விக்கிரகத்தை நீ எங்காவது பார்த்திருக் கிருயா?" என்று ஒரு கேள்வியைப் போட் டார். மலையரசி ஒன்றும் புரியாமல் விழித்தாள்.

சற்று முன் விளையாடச் சென்றிருந்த ஆத் மன் இப்பொழுது தன் சிற்றப்பா பெண் திரு மொழியைத் தோளில் சார்த்தி அவளிடம் கொஞ்சிக்கொண்டே அங்கே வந்தான். "தாத்தா, இவள் புதிதாகப் பாரதிப் பாட்டு கற்றுக்கொண்டு விட்டாளாம். உங்களிடம் உடனே ஒப்புவிக்க வேண்டும் என்று பிடி வாதம் பிடிக்கிருள்" என்ருன். சிவனடி "என் செல்லம், எங்கே பாடு பார்க்கலாம்" என்ருர். திருமொழி கை, கால், கண், முகம் எல்லாவற் றையும் அசைத்து அசைத்துச் சைகைகள் செய்து கொண்டே மழலைமிழற்றும் குரலில் வீணை மீட்டினள்:

"பாதகம் செய்பவரைக் கண்டால்,
நீ பயங்கொள்ளல் ஆகாது பாப்பா!
மோதி மிதித்துவிடு பாப்பா,
அவர் முகத்தில் உமிழ்ந்துவிடு பாப்பா."

தேனும் பாலும் சேர்த்துப் பருகியது போலி ருந்தது அங்கிருந்த எல்லாருக்கும். கைநிறை யக் கற்கண்டை அள்ளி எடுத்துத் திருமொழி யின் கையில் வைத்திருந்த வண்ணப் புத்தகத் தின்மீது வைத்தார் சிவனடி. "என் செல்லம்மா, எல்லாக் குழந்தைகளுக்கும் கொடுத்து விட்டு நீயும் சாப்பிடு" என்று சொல்லி உச்சிமோந்து முத்தம் பொழிந்தார். வயதில் பெரியவர் களுடன் ஆங்கிலத்தில் சரளமாக உரையாடும் அந்தக் குழந்தை இக்காலத்து அரைவேக்காடு களைப் போலில்லாமல் தன் தாய் மொழியிலும் சிறந்த பற்றும் பழக்கமும் வைத்திருப்பதைத்

தன்னுடைய பெரும்பேறு என்றே கருதினர். சற்றுப் பொறுத்து ஆத்மன் குழந்தையை அழைத்துக்கொண்டு சென்றான்.

அந்தச் சூழ்நிலையின் இறுக்கம் சற்றே தணிந்தது. ''பாரதி கற்றுக்கொடுக்கும் பண்பைப் பாருங்கள் அப்பா, சிறுகுழந்தையிடம் போய் 'மிதித்துவிடு, உமிழ்ந்துவிடு' என்றெல்லாம் வழி சொல்கிறார்'' என்று சிணுங்கும் குரலில் பொய்க்கோபம் காட்டினாள் மலையரசி. இதைக் கேட்டுக் கலகலவென்று நகைத்தார் சிவனடி. ''அம்மா, மலையரசி! நீ படிப்பில் கெட்டிக்காரி. ஆனால் பழக்கத்தில் நீ இன்னும் சிறு குழந்தை தான். உலகத்தில் எல்லாரும் உன்னைப் போலவே உத்தமிகள் என்று எண்ணிக்கொண்டிருக்கிறாய். களையைக் கிள்ளி எறிந்தால் தான் நெல் விளையும். பதரை நீக்கினால்தான் அரிசியைச் சமைத்து உண்ணமுடியும். இந்த உலகத்தில் நல்லவர் ஒருவர் இருந்தால் அவரைப் பார்த்துப் பொறாமைப்படும் நயவஞ்சகர்கள் நாற்பதுபேர் இருப்பார்கள். நல்லவன் வாழ்க்கையை இழந்தாலும் பாதகமில்லை. ஆனால் கோழையாகமட்டும் இருந்துவிடக் கூடாது. ஏனென்றால் கோழை தனக்குமட்டுமல்லன், தன்னை நம்பினவர்களுக்கும், தான் கொண்ட கொள்கைக்கும், ஏன், தான் நம்பும் கடவுளுக்கும் கூட தன்னுடைய ஆபத்துக் காலத்தில் பெரும் துரோகம் செய்தவனாகிறான். தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும் அல்லவா? ஆகவேதான் மழலைப்பருவத்திலேயே வீர உணர்ச்சியைத் தூண்டி விழிப்பை ஏற்படுத்துகிறார் பாரதி'' என்று விரிவாக அவர் கூறிய கருத்துக்கள் தம் மகளின் உள்ளத்தில் ஆழமாகப் பதிவதை அவள் முக பாவத்திலிருந்து அறிந்துகொண்டார்.

சற்றே யோசனையிலிருந்த மலையரசி, ''அப்பா, முயலகனைப்பற்றி ஏதோ சொல்ல வந்தீர்களே, அது என்ன?'' என்று கேட்டாள். ''மௌடீகம் அல்லது முட்டாள்தனத்தின் மொத்த உருவம்தான் முயலகன். தன் அடியார்களை அவ்வரக்கன் துன்புறுத்தாதவாறு தம் காலடியில் கிடத்தி அடக்கி வைக்கின்றார் சிவபெருமான். அறிவும் அருளும் ஒருருவமாக வந்து அற்புத நடனம் புரிகையில் அந்தமில்லா ஆனந்தம் தோன்றும். அக்ஞானத்தை வென்று மெய்ஞ்ஞானம் பெற்றவர்களுக்கே இந்த அனுபவமும், அநுபூதியும் வந்து வாய்க்கும். ஆக, தீமையை வென்று அதையே நன்மையாக, தமக்கு ஆபரணமாக ஆக்கிக்கொண்டவர் கயிலை மூர்த்தி. ஆதலால்தான் சொன்னேன், முயலகன் இல்லாமல் கூத்தனின் வடிவம் முழுமை பெறாது என்று'' எனக் கூறி முடித்தார் சிவனடி.

''புரிகிறது அப்பா, வாழ்க்கையில் தீமைகளும், துன்பங்களும் நேர்வது சகஜமே. அத்தகைய தடைக்கற்களைத் தாண்டினால்தான் நாம் முன்னேறிக்கொண்டிருக்கிறோம் என்பது உறுதிப்படும். அப்படித்தானே?'' என்று முக மலர்ச்சியுடன் கேட்டாள் மலையரசி. ''நீ கெட்டிக்காரி, சொன்னதை உடனே புரிந்து கொண்டாய்'' என்று பகர்ந்தார் சிவனடி. ''சரி அப்பா, இந்தப் பிரச்னையை நானே சமாளிக்கப் பார்க்கிறேன்'' என்று கூறி எழுந்து சென்றாள். தம் மகளுக்கு எப்படியோ தன்னம்பிக்கையும், தைரியமும் வந்ததைக் குறித்து நிம்மதி அடைந்தவராய்த் தம் மாலைப் பிரார்த்தனைக்காக எழுந்து சென்றார் சிவனடி.

ஒரு சில நாட்கள் சென்றிருக்கும். ஒருநாள் காலைப்பொழுதில் தன் கல்லூரித் தோழி செந்திருவுடன் பேசிக்கொண்டிருந்தாள் மலையரசி. செந்திரு தன் தோழியைப் போலவே அழகு, படிப்பு, பண்பு எல்லாவற்றிலும் சிறந்து விளங்கினாள். அவள் வடிவழகும், முக அழகும் ஒன்றோடு ஒன்று போட்டி போடும். படிக்கப் படிக்கச் சுவையை அதிகரிக்கச் செய்யும் நல்ல புத்தகத்தைப்போல அவள் குரல் வளம் கேட்கக் கேட்க இனிமையைப் பெருக்குவதாக இருந்தது. ஆனால் எல்லாமிருந்தும் இறைவன் அவளுக்கு ஒரு குறையைக் கொடுத்துவிட்டான். அவளுடைய பெற்றோர் பரம ஏழைகள். அவள் ஒவ்வொரு நாளும் ஒரு வேளை உண்பதே பெரும்பாடாக இருந்தது. கீழ்க்குலத்தில் பிறந்தவள் ஆதலால் சமூகத்திலும் பல அவதிகளைச் சகிக்க நேர்ந்தது. எல்லாவற்றையும் பொறுத்துக்கொண்டு ஓர் உத்வேகத்துடன் முயன்று படித்து வந்தாள். அவளுடைய நிலையறிந்து மலையரசியின் குடும்பத்தார் பல வகைகளில் அவளுக்கு உதவிகள் புரிய முயன்றார்கள். ஆனால் செந்திருவின்

பெற்றோர் வயிற்றைவிட மானத்துக்கு அதிக மதிப்புத் தந்தார்கள். மிகவும் அவசியமும், அவசரமும் நேர்ந்த வேளைகளில் தவிர மற்றச் சந்தர்ப்பங்களில் சிவனடியின் உதவிகளைத் தாழ்மையுடன் மறுத்துவிட்டார்கள். அவர்கள் மிகவும் ரோஷக்காரர்கள் ஆதலால் அவர்களுடைய மனம் புண்படாத வகையில் அவர்களுடன் இணக்கமாகப் பழகினுள் மலையரசி.

அன்றைய தினம் அனைத்துக் கல்லூரிகளும் நிகழ்த்திய விஞ்ஞானக் கண்காட்சியில் பரிசுகள் பலவற்றை அறிவித்தார்கள். அதில் இவர்கள் இருவரும் செய்து வைத்திருந்த காட்சி அமைப்பே முதல் இடத்தைப் பெற்றது. மனித உடலின் மாதிரி அமைப்பை உருவாக்கி அவன் உண்ணும் உணவு எவ்விதம் குருதியாக மாறுகிறது என்பதைத் தத்ரூபமாகச் செய்து காட்டியிருந்தார்கள். நடுவர்களும், பார்வையாளர்களும் அது மிகவும் இயற்கையாக அமைந்திருப்பதாகப் பாராட்டிப் பேசினர். இரண்டு மாதங்கள் தாங்கள் கடுமையாக உழைத்ததன் பலனைச் செந்திருவும், மலையரசியும் அன்று கண்ணுரக் கண்டும், காதாரக் கேட்டும் களிப்பு எய்தினர்.

அவர்கள் மகிழ்ச்சியுடன் அனைவரின் பாராட்டுதல்களுக்கும் நன்றி தெரிவித்துவிட்டுத் தாங்கள் வழக்கமாய்ச் செய்யும் நண்பகல் மௌனப் பிரார்த்தனைக்காக ஆலமரத்தடியை நோக்கி நடந்தனர். இடியோசையைப்போல ஒலி எழுப்பிக்கொண்டு 'சைலன்சர்' இல்லாத மூன்று மோட்டார் சைக்கிள்களில் திக்கனும் அவனுடைய நண்பர்களும் அங்கே வந்து சேர்ந்தனர். "மலையரசி, கிளம்பு உடனே. நான் காலையில்தான் இவ்வூருக்கு வந்தேன். நண்பன் வீட்டில்தான் தங்கி இருக்கிறேன். இப்பொழுது நாம் ஒரு மலையாளப் படத்துக்குப் போகின்றோம்" என்று நிறுத்தாமல் பேசினுன் திக்கன். அவனுடைய பகட்டான உடையும், துடுக்கான பார்வையும் அவன் பணச் செருக்கைப் பறை சாற்றின. அவன் நண்பர்களின் பேச்சும், போக்கும் மிகவும் அட்டகாசமாய் இருந்தன. எதையும் லட்சியம் செய்யாதவர்களாக எவரையும் மனம் புண்படுத்துபவர்களாகக் காணப்பட்டார்கள். தங்களின் பெற்றோருடைய பணபலத்தைக் கொண்டு ஆயுள் முழுவதும் தாங்கள் சமாளித்துக்கொள்ளமுடியும் என்ற பைத்தியக்கார நம்பிக்கை அவர்களின் ஒவ்வொரு சிறு செயலிலும் தென்பட்டது. அவர்களில் ஒருவன், "மலையரசியின் பக்கத்திலிருப்பவளும் அழகாய்த்தான் இருக்கிருள். அவளையும் வரச்சொல்" என்று திமிருடன் சொன்னுன். அதைக் கேட்டு அவன் நண்பர்கள் ஏளனமாக நகைத்தனர்.

கம்பீரமாக நின்ருள் மலையரசி. மனிதர்கள் என்ற பெயரில் தன் எதிரே நிற்கும் துரும்புகளை 'இதுவும் இறைவனின் படைப்புத்தான்' என்ற எண்ணத்தோடு பார்த்துப் பேசலானுள்: "திக்கன், நாங்கள் வகுப்புக்குப் போகவேண்டும். உங்களோடு திரைப்படம் பார்க்க எங்களுக்கு விருப்பம் கிடையாது." "என்ன நீ, நான் அழைக்கிறேன், ஏதோ பத்தாம் பசலியாகப் பேசுகிருயே, என் பேச்சை மீறினுல் என்ன நடக்கும் தெரியுமா?" என்று சீறினுன் திக்கன். "மரியாதை கொடுப்பவர்களை நாமும் மதிப்பதுதான் பண்பாடு, திக்கன். ஆனுல் நீ முழுமூடன். இந்த உடல் திமிரை வைத்து அப்பாவிகளை வேண்டுமானுல் நீ மிரட்டலாம். ஆனுல் நாலும் தெரிந்தவர்கள் உன்னை நாலு பைசாவுக்குக்கூட மதிக்க மாட்டார்கள். என்னைத் திரைப்படத்துக்கு அழைத்துப்போவதற்கு நீ யார்? என்ன உரிமையில் இங்கே வந்து இப்படிப் பேசுகிருய்?" என்று மலையரசி கோபித்தாள். அவ்வளவுதான், தன் சுயரூபத்தை வெளிக்காட்டினுன் திக்கன். "உரிமையைப் பற்றியா பேசுகிருய் நீ? இதோ காட்டுகிறேன் பார் உரிமையை" என்று கூவிக்கொண்டே பாய்ந்து அவள் கையைப் பிடித்து முரட்டுத் தனமாக முறுக்கினுன். மலையரசி, செந்திரு இருவருக்கும் இது சினத்தை முட்டியது. "அடே முரடா, விடு அவள் கையை" என்று கத்திக்கொண்டே தன் கையிலிருந்த உணவுப் பாத்திரத்தை அவன் முகத்தின் மீது விட்டெறிந்தாள் செந்திரு. பாத்திரம் திறந்து கொண்டு அதில் இருந்த தயிர்ச்சாதமெல்லாம் அவன் முகத்திலும் உடையிலும் வழிந்தது. உடனே அவனுடைய நண்பர்கள் நரிகள் போல் ஊளையிட்டுக் கொண்டு அவளைச் சூழ்ந்தனர். (தொடரும்)

# குறிப்புகள்

(சுவாமி துருவானந்தர்)

**சதுரகிரி மஹாலிங்க மலையில் மூன்று நாட்கள்**

தென்னிந்தியர்கள் வடநாட்டுக்கு யாத்திரை போகிறார்கள். அமர்நாத், பத்ரிநாத், கேதார்நாத் போன்ற இமயமலையில் உள்ள ஆலயங்கள் சில நாட்கள்தான் திறந்திருக்கும். மற்றக் காலங்களில் அவற்றைப் பனி மூடிவிடும். ஆனால் நமது தமிழகத்திலே மாதந்தோறும் வெள்ளிக்கிழமையன்று போகிற ஓர் உன்னதமான ஸ்தலம் இருக்கிறது. அதன் பெயர் சதுரகிரி மஹாலிங்க மலை என்பதாகும். மேற்கு இராமநாதபுரம் மாவட்டத்தில் மதுரையிலிருந்து தென்காசி, குற்றாலம் போகும் நெடுவழிப் பாதையின் இடையில் கிருஷ்ணன் கோயில் என்னும் ஊரிலிருந்து மேற்கே சென்றால் வத்திராயிருப்பு என்னும் ஊர் உள்ளது. ஆங்கிருந்து தாணிப்பாறை என்ற இடம்வரை ஆடி அமாவாசையன்று பஸ் போகிறது. மற்ற நாட்களில் வத்திராயிருப்பிலிருந்து தாணிப்பாறை வரை நடந்துபோய் அங்கிருந்து மலையேறும் முயற்சியில் ஈடுபடவேண்டும். சதுரகிரி மஹாலிங்கமலை என்றாலே இராமநாதபுர மாவட்ட மக்களுக்கு அதுவும் குறிப்பாக விருதுநகர், சிவகாசி, சாத்தூர், ராஜபாளையம், அருப்புக்கோட்டை மக்களுக்கு மட்டும் இது முன்பு தெரிந்திருந்தது. அந்தப் பகுதி மக்கள் அங்கு நிறைய வந்து கொண்டிருந்தனர். அதன் மகத்துவத்தை உணர்ந்த ஹிந்துக்கள் இப்போது தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்தெல்லாம் வர ஆரம்பித்துள்ளனர். ஆங்குச் சிவலிங்கம் சுயம்புலிங்கமாக அமைந்துள்ளது. வல்ல நாட்டுச் சுவாமி என்பவர், இராமலிங்க சுவாமிகளின் பக்தர் ஆவார். அவர் இப்போது இல்லை. அந்தப் பகுதி, மற்றும் கோவை, பொள்ளாச்சி பகுதியில் இந்தச் சதுரகிரி மஹாலிங்க மலையைப் பற்றிய பெருமையை மக்கள் மத்தியில் பரப்பிப் பலரை இப்போது கோயிலுக்கு யாத்திரையாக வரும்படி செய்த பெருமை அவரைச் சேர்ந்தது என்று பலர் சொல்கிறார்கள்.

இத்தகைய அற்புதமான மலையொன்று நம் தமிழகத்தில் இருந்தும் கூட அதைப் பார்க்காதும், அதைபற்றித் தெரிந்துகொள்ளாதும் இருந்த எங்களுள் சிலர் மஹாலிங்க மலையில் மூன்று நாட்களாவது தங்கி அந்தர்யோகமுறையில்' நிகழ்ச்சிகள் வைத்துக்கொள்ளலாமெனத் திட்டமிட்டோம். ஜுலை மாதம் 29ஆம் தேதி கல்லுப்பட்டி காந்தி நிகேதன் ஆச்ரமத்திலிருந்து காலையில் வேனில் புறப்பட்டு இரண்டு மணி நேரத்திற்குள் தாணிப்பாறைக்குப்போய்ச் சேர்ந்தோம். எங்கள் குழுவில் மொத்தம் எட்டுப் பேர் இருந்தனர். அவர்களுள் ஐந்து பேர் அடிக்கடி அம்மலைக்குப் போய் வந்தவர்கள். ஆகவே மூன்று நாட்கள் தங்குவதற்குரிய உணவுப்பொருட்களைக் கூலிக்கு ஆள்பிடித்து முன்னமே அனுப்பிவிட்டு, தாணிப்பாறையில் செய்ய வேண்டிய வழிபாடுகளை முழுமையாக முடித்து மூன்று நாட்கள் யாத்திரை நல்லபடியாக நிறைவேற ஏற்பாடு செய்தோம். வழியில் நீர் இருக்கும் இடத்தில் சிற்றுண்டியை முடித்தவுடன் மலையேறத் தொடங்கினோம். காலையில் எட்டு மணிக்குள் புறப்பட ஆயத்தமானோம். வழி முழுவதும் நாம ஜபம் தொடர்ந்து நடைபெற்றுக்கொண்டே இருந்தது. மதியம் பன்னிரண்டு மணிக்குள் இரண்டு மூன்று மலைகளைக் கடந்து மஹாலிங்க மலைக்கு அருகில் சென்றோம். வழியில் பாதாளமாக உள்ள பகுதிகளிலும், சமவெளியாக உள்ள சில இடங்களிலும் ஏற்றமிகுதியால் ஆங்காங்கு ஓய்வு எடுத்துப் போனோம். பலாவடிக் கருப்பசாமி கோயில் என்று ஓர் இடம் இருக்கிறது. ஆங்கு ஆடி அமாவாசையன்று இலட்சக்கணக்கான மக்கள் வந்து ஆடு வெட்டிப் பொங்கலிட்டு வழிபாடு பண்ணுவதாகச் சொல்கிறார்கள். மனிதன் அவனவன் இயல்பின்படி தெய்வத்தை வழிபாடு செய்கிறான். மனது சத்துவ குணத்தில் போகப்போக அவன் இயல்பாக ஜபம், தியானத்தில் ஈடுபடுகிறான்.

மஹாலிங்க மலையில் பலர் தங்குவதற்குரிய சூழ்நிலையில்லை. நல்ல சிற்றுண்டிச்சாலை இல்லை. ஆனால் ஒவ்வோர் ஆண்டும் ஆடி அமாவாசையன்று ஏராளமாக மக்கள் வருவதால் விழாவை முன்னிட்டுத்தாற்காலிகக் கடை

போடப்படுகிறது. நகரத்தை விட்டு வெளியே போகாதவர்கள், நல்ல ஆரோக்கியத்தை விரும்புகிறவர்கள் நடைப் பயிற்சியைக் கைக்கொள்வது நலம். அதிலும் மலையின்மீது ஏறி நடந்துசெல்லுதல் சிறப்பு. மஹாலிங்க மலையில் மூலிகைகள் ஏராளமாயிருப்பதால் அதன்மீது பட்டு வருகிற காற்று உடலுக்கும் மனதுக்கும் தெம்பை நல்குகின்றது. சமைப்பதற்கு வேண்டிய உணவுப்பொருட்களை நாம்கீழிருந்துமேலே கூலி வைத்துக் கொண்டு எடுத்துச் செல்ல வேண்டும். மலைநாட்டு உணவுப் பொருட்களைக் கொண்டு சென்று சமைத்து உண்கின்றனர். மலைமேல் ஏறிச் செல்லும் போது சுமையில்லாது, உடம்பில் சட்டையில்லாது போகும் போது சுகமாக நடக்கமுடிகிறது. **Less luggage more Comfort** என்று சொல்வதற்கேற்ப உடலிலும், மனத்திலும், மூட்டை முடிச்சு, உலக வியவகாரம் என்கிற சுமையில்லா தவரை யாத்திரை எங்கும் இன்பமாகவேயிருக்கும். மஹாலிங்க மலையில் யானைகள் அதிகம். எப்போதாவது கரடி,புலி வந்து தென்படுவதுண்டு. பகலில் தான் மலைமீது ஏறத்தொடங்க வேண்டும். இரவில் யாத்திரை பண்ணுவது கிடையாது. மிருகங்களின் நடமாட்டம் இரவில் இருக்கும். ஆங்குத் தவசிப்பாறை என்னும் ஓர் குகையிருக்கிறது. கொஞ்ச தூரம் மலைமீது ஏறி மேலே போக வேண்டும். தவசிகள் பலர் ஆங்குத் தபசு பண்ணியதாகச் சொல்லப்படுகிறது. மக்கள் மிகவும் சிரமப்பட்டுத்தான் ஆங்குப் போகவேண்டும். அந்தத் தவசிப் பாறையிலிருந்து நாற்புறமும் பார்த்தால் வானளாவி பச்சைக் கம்பளம் போர்த்தியது போன்று மலைகள் நம்மைச் சுற்றியிருப்பது கண்ணுக்குப் புலப்படும். ஆங்குள்ள பாம்பாட்டிச் சித்தர் குகை, வெள்ளை விநாயகர், மணிகட்டிச் சித்தர் குகை என்றெல்லாம் சொல்லப்படுகிற இடம், எமபுரம் காடு முதலியன அடர்ந்த காட்டுப் பிரதேசம். இந்த இடங்களைப் பார்க்க வேண்டுமானல் வழித்துணைக்கு மலையில் வாழும் (ஆதிவாசிகளை)பளியர்களை அழைத்துச் செல்ல வேண்டும். வயது முதிர்ந்த பளியன் ஒருவனை வழித்துணைக்கு அழைத்துச் சென்றோம். அவன் முன்னே செல்ல நாங்கள் வரிசையாக நாமஜபம் உரக்கச் சொல்லிக்கொண்டுபோனேம். நாம ஜபத்துடன் நடந்து சென்றது எங்கள் மனதுக்கு மிகவும் இன்பமாக இருந்தது.

மஹாலிங்க மலையில் நாற்பது பளியர் குடும்பங்கள் உள்ளன. உடைகூட உடுத்தத் தெரியாது இருக்கும் அவர்களுக்கு உடை கொடுத்து, பேசச் சொல்லிக்கொடுத்து, அவர்களுக்குத் தினமும் உணவு கொடுத்தும், கடவுள் நாமத்தைச் சொல்லிக்கொடுத்தும் மிகப் பெரிய புனிதமான கைங்கரியத்தை காளிமுத்துசுவாமி என்கிற ஓர் அன்பர் செய்துவருகிறர். மஹாலிங்க மலைக்குவருகிறவர்கள் யாராயிருந்தாலும் பசிக்கு உணவு கொடுத்துப் பக்திசிரத்தையோடு அவர் செய்கிற செயல் நம்மை மெய்சிலிர்க்க வைக்கிறது.பிறர் நலனுக்காகவேண்டி தன்மில்வேலையை ராஜினமாச்செய்துமணம்புரியாது சுந்தரமஹாலிங்க சுவாமிக்குத் தொண்டு செய்வதையே இலட்சியமாக ஏற்று அவர் அந்தப் புனித கைங்கரியம் செய்துவருகிறர்.

சித்தர்கள் வாழும் மலை என எல்லாராலும் பேசப்படுகிற மலை மஹாலிங்க மலை. ஏராளமாகக் குகைகள் இருப்பதாலும், காட்டிலிருக்கும் சில யானைகள் மஹாலிங்க சுவாமியை வணங்கித் தம் போக்கில் போவதாலும் அம்மலையில் சித்தர்கள் இருக்க வேண்டுமென்ற நம்பிக்கை அம்மலைக்குச்செல்கின்றவர்கள் மனதில் உண்டாகின்றது.

---

# செய்திகள்

**நீகம்பவை**

*16—10—83* சனிக்கிழமையன்று சரஸ்வதி பூஜையாகும்; அன்று பகல் பன்னிரண்டு மணி நேரம் ஸ்ரீவிவேகானந்த வித்யாவனக் குருகுல மாணவர்கள் அகண்ட நாமபஜனை செய்வார்கள். அன்று இரவு சுமார் 7 மணிக்கு ஸ்ரீவிவேகானந்த வித்யாவனக் குருகுல மாணவர்கள் குழுக்களாகச் சேர்ந்து சரஸ்வதி பூஜையைச் சிறப்பாகக் கொண்டாடுவார்கள்.

## ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
### இயற்றிய நூல்கள்

| | |
|---|---|
| திருவாசகம் பிரசார விலை ரூ. | 23-00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை 14-ம் பதிப்பு ,, ... | 18-00 |
| மஹாபாரதம் ,, ... | 7-00 |
| இராமாயணம் ,, ... | 5-00 |
| ஸ்ரீ தாயுமானசுவாமி பாடல்கள் ,, ... | 6-00 |
| ஸ்ரீராமகிருஷ்ணர் உபதேச மஞ்ஜரி ,, ... | 5-50 |
| தினசரி தியானம் ,, ... | 4-50 |
| ராஜயோக விளக்கம் ... | 12-00 |
| கர்மயோக விளக்கம் ... | 10-00 |
| பக்தியோக விளக்கம் ... | 9-00 |
| ஞானயோக விளக்கம் ... | 8-00 |
| பரமஹம்சரின் பெருமை ... | 6-00 |
| ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் ... | 6-00 |
| கடவுளின் வடிவங்கள் ... | 6-00 |
| சந்தேகம் தெளிதல் பாகம்—1 ... | 5-50 |
| சந்தேகம் தெளிதல் பாகம்—2 ... | 5-50 |
| விவேகானந்த விவரணம் ... | 4-00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ண சரிதம் ... | 3-50 |
| ஸ்ரீ சாரதாதேவியார் சரிதம் ... | 3-00 |
| அனுஷ்டான வேதாந்தம் ... | 3-00 |
| எதிர்கால இந்தியா ... | 3-00 |
| திருக்கயிலாயகிரி யாத்திரை ... | 3-00 |
| பஜனைப்பாடல்கள் ... | 3-00 |
| தேவரகசியம் (முதலிய கதைகள்) ... | 2-50 |
| தாயுமானவர் இயற்றிய | |
| கருணாகரக் கடவுள் விரிவுரை ... | 3-50 |
| பரிபூரணானந்தம் ஷை ... | 3-00 |
| சின்மயானந்த குரு ஷை ... | 3-00 |
| ஆனந்தமானபரம் ஷை ... | 3-00 |
| சுகவாரி ஷை ... | 3-00 |
| மௌனகுரு வணக்கம் ஷை ... | 3-00 |
| எங்கும்நிறைகின்றபொருள் ஷை ... | 2-50 |
| மலைவளர் காதலி ஷை ... | 1-50 |
| பரசிவ வணக்கம் ஷை ... | 1-00 |
| கண்ணன் என்னும் கடவுள் ... | 2-50 |
| ஹரிச்சந்திரன் (நாடகம்) ... | 2-00 |
| பாதுகாபட்டாபிஷேகம் ஷை ... | 1-75 |
| விரதவீரர் பீஷ்மர் ஷை ... | 1-50 |
| விபீஷணன் சரணாகதி ஷை ... | 1-50 |
| பரமஹம்சர் பாமாலை ... | 1-50 |
| காயத்ரீ ... | 1-50 |
| நன்மக்களைப் பெறுதல் ... | 1-50 |
| அமரநாத யாத்திரை ... | 1-25 |
| மாணுக்கன் ... | 1-25 |
| செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா? ... | 1-25 |
| சைவன் யார்? ..., | 1-25 |
| இறைவணக்கம் ... | 1-00 |
| குழந்தைகளின் களிக்கூடம் ... | 1-00 |
| இராவண தத்துவம் ... | 1-00 |
| வாலி மோட்சம் (நாடகம்) ... | 1-00 |
| தவப்புதல்வர்கள் (நாடகம்) ... | 1-00 |

| | |
|---|---|
| ஏகலைவ்யனின் குருபக்தி (நாடகம்) ... | 1-00 |
| தானவீரன் கர்ணன் (நாடகம்) ... | 1-00 |
| மார்க்கண்டேயன் (நாடகம்) ... | 1-00 |
| பிரஹ்லாதன் (நாடகம்) ... | 1-00 |
| தபோபலன் (நாடகம்) ... | 1-00 |
| பார்வதி,லக்ஷ்மி,சரஸ்வதி கர்வபங்கம் ... | 1-00 |
| இந்துமதமும் கிறிஸ்துவமதமும் ... | 1-00 |
| நோய்க்கு இடம் கொடேல் ... | 1-00 |
| *ஆத்ம சக்தி ... | 1-00 |
| *சக்தி தத்துவம் ... | 0 90 |
| *சூரியநாராயணன் ... | 0-75 |
| தெய்விக மகிமைகள் ... | 0-75 |
| *ஆலய வழிபாடு ... | 0-75 |
| *சிவதத்துவம் ... | 0-70 |
| *மனிதனது நிஜசொரூபம் ... | 0-70 |
| தாயுமானவர் ஆலயத்தில் தத்துவ அமைப்பு ... | 0-60 |
| நன்னெறிகளும் அருள்வாக்குகளும் ... | 0-60 |
| *கணபதி ... | 0-60 |
| *முருகக்கடவுள் ... | 0-50 |
| விஷ்ணு தத்துவம் ... | 0-50 |
| கர்மகாண்டம் எது? ஞானகாண்டம் எது? | 0-50 |
| வர்ணாச்ரம தர்மம் ... | 0-30 |
| அருள் விருந்து 1 to 25 ஒவ்வொன்றும் ... | 0-30 |
| விவேகானந்தரின் வீர கர்ஜனை ... | 0-30 |
| கந்தர் அநுபூதி ... | 0 25 |
| The Bhagavad Gita (11th Imp.) ... | 24-00 |
| Tirukkural (with plastic cover) ... | 8-00 |
| The Indian National Education ... | 8-00 |
| Ramakrishna lives Vedanda ... | 8-00 |
| Mahaveer Sri Hanuman ... | 7-75 |
| The Bhagavad Gita (Small Size) ... | 6-00 |
| Man Making Message ... | 7-00 |
| Ramayana (with plastic cover) ... | 7-00 |
| Mahabharata ,, ... | 6-00 |
| Daily Divine Digest (DELUXE) ... | 6-00 |
| Daily Divine Digest (Ordinary) ... | 4-00 |
| Sri Krishna-The Manifest Divinity ,, ... | 6-00 |
| Facets of Brahman or The Hindu Gods ... | 5-00 |
| Sri Vishnu Sahasranama Stotram ... | 4-00 |
| Siva Sahasranama Stotram ... | 3-50 |
| Bheeshma The Superman ... | 3-50 |
| Hinduism Hosts Christianity ... | 3-00 |
| *Introducing the Gita ... | 2-00 |
| Holy Bible—In the Light of Vedanta ... | 1-50 |
| Reminiscences of Master Mahashaya ... | 1-50 |
| The Garland of Paraaparam ... | 1-50 |
| *Key to Higher Life ... | 1-25 |
| *The student ... | 1-25 |
| The Teacher ... | 1-00 |
| The School ... | 1-00 |
| The Nursery School ... | 1-00 |

# சேலம் ஸ்ரீ ஸாரதா ஸமிதியில் அந்தர்யோகம்

சேலம் ஸ்ரீ ஸாரதா ஸமிதியில் 7—10—83 முதல் 9—10—83 முடிய மூன்று நாட்கள் சக்தி பூஜை அந்தர்யோகம் ஸ்ரீ ஸாரதா வித்யாலயத்தில் நடைபெறும். இதில் கலந்துகொள்ள விரும்பும் தாய்மார்கள் மட்டும் அக்டோபர் மாதம் 6ஆம் தேதி வியாழக்கிழமை இரவே நேரில் வந்து நாள் ஒன்றுக்கு ரூ. 8-00 வீதம் ரூ. 24-00 மட்டும் உணவுக்காகச் செலுத்திப் பெயர்களைப் பதிவு செய்து கொள்ளவேண்டும். அமைதியைக் காக்க 12 வயதுக்குக் கீழ்ப்பட்ட சிறுமிகளும், கைக்குழந்தைகளுடன் வரும் தாய்மார்களும் இதில் சேர்த்துக்கொள்ளப்படமாட்டார்கள்.

## வாழ்க்கை முறை

**காலை**

| | மணிமுதல் | மணிவரை |
|---|---|---|
| துயில் எழுந்திருத்தல் | 4-30 | |
| நாம ஜபம் | 5-00 | 5-30 |
| ஸ்நானம் | 6-00 | 7-30 |
| ஆரதி | 7-30 | |
| சிற்றுண்டி | 7-45 | |
| பஜனை | 8-30 | 9-30 |
| ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம விளக்கவுரை | 10-00 | 11-00 |
| அர்ச்சனை | 11-00 | 12-00 |
| உணவு, ஓய்வு | 12-30 | 3-00 |

**மாலை**

| | மணிமுதல் | மணிவரை |
|---|---|---|
| ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம விளக்கவுரை | 3-00 | 3-45 |
| நாம ஜபம் | 4-00 | 4-30 |
| சிற்றுண்டி | 4-30 | |
| ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம அர்ச்சனை, ஆரதி, பிரார்த்தனை | 6-00 | 7-00 |
| தியானம் | 7-00 | 7-30 |
| உணவு | 7-45 | |
| ஸத் ஸம்பாஷணை | 8-30 | 9-30 |

குறிப்பு:— 1. அக்டோபர் 7, 8 ஆகிய இரண்டு தினங்களிலும் ஸ்ரீ ஸாரதா கல்லூரி பிரார்த்தனைக் கொட்டகையிலும் அக்டோபர் மாதம் 9ஆம் தேதி ஸ்ரீ ஸாரதா வித்யாலயத்திலும் காலை 10-00 மணிமுதல் 11 மணிவரை ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்களால் ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாம விளக்கம் நடைபெறும். இவைகளில் அன்பர்களும் கலந்து கொள்ளலாம். மேற்படி மூன்று தினங்களிலும் மாலை 3-00 முதல் 3-45 மணிவரை ஸ்ரீ ஸாரதா வித்யாலயத்தில் ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம விளக்க உரை யதீஸ்வரிகளால் நடைபெறும். இவைகளில் தாய்மார்கள் மட்டும் கலந்து கொள்வார்கள்.

2. ஸாரதா வித்யாலயத்தில் அக்டோபர் 9ஆம் தேதி மாலை அர்ச்சனை 4-30 மணி முதல் 5-30 மணிவரை நடைபெறும். அன்று மாலை 6-00 மணிக்கு ஸ்ரீ ஸாரதா கல்லூரியில் ஸ்ரீ ஸாரதா ஸ்தாபனங்களின் மாணவிகளால் கலாநிகழ்ச்சிகள் நடைபெறும். அன்பர்களும் இதில் கலந்துகொள்ளலாம்.

Edited by SWAMI NITHYANANDA,
Printed & Published by Swami Sankarananda at Tapovanam Printing School, Tirupparaitturai, Tiruchi Dt.